# இலக்கியப் புன்னகை




டாக்டர் மு.பி. பாலசுப்பிரமணியன்,
எம்.ஏ. பிஎச்.டி.,
தமிழ்ப் பேராசிரியர்
பச்சையப்பன் கல்லூரி. சென்னை-30.

முத்து நிலையம்
124/3, பாரதி குடியிருப்பு,
அண்ணாநகர் மேற்கு,
சென்னை-600 040.

முதற் பதிப்பு : டிசம்பர், 1988
இரண்டாம் பதிப்பு : நவம்பர், 1989



காணிக்கை

என் பேராசான்

டாக்டர் மு. வரதராசனார்

அவர்களுக்கு

ஆசிரியரின் பிற நூல்கள் :

வாணிதாசன் கவிதைகள் - ஓர் ஆய்வு
வாணிதாசன் இலக்கியத்திறன்
இலக்கிய நெஞ்சம்
சிறுபாணாற்றுப்படைச் செல்வம்
கவிதை மேகங்கள் (அரசு பரிசு பெற்றது)
மணிவேந்தன் கவிதைகள்
எத்தனை கோடி இன்பம்
சீனத்துப் பரணி
பாண்டியநாட்டுப் பாவை

விலை : ரூ. 12-00

விற்பனை உரிமை :
பாரி நிலையம்
184, பிரகாசம் சாலை
சென்னை-600 108

அச்சிட்டோர் :
மாருதி பிரஸ்
173, பீட்டர்ஸ் ரோடு
சென்னை-600 014

57/2

# அன்பு நெஞ்சம் அணி செய்கிறது!

டாக்டர் மு. பி. பாலசுப்பிரமணியன், துடிதுடிப்புள்ள உளமும் தமிழ் ஆர்வமும் தளரா ஊக்கமும் சலியா உழைப்பும் உடையவர். இவர்தம் நூல்கள் பல முன்னரே பாடநூல்களாகவும் பொதுமக்கள் பயிலும் நூல்களாகவும் நாட்டில் நடமாடுவதை அனைவரும் அறிவர். முதுகலை வகுப்பு வரை பயிற்றும் நல்லாசிரியர் என்பதோடு, நல்ல நூலாசிரியராகவும் விளங்கும் இவர் வாழ்வு, மேலும் மேலும் சிறக்க என வாழ்த்துகிறேன். இவர்தம் நூல்கள் தமிழக வழிகாட்டிகளாக நின்று மக்கள் உளமாசு நீங்கி ஒளிபெறச் செய்வனவாக! அன்பர் பாலசுப்பிரமணியனின் அறிவுப்பணி தழைக்க! ஆர்வம் கலந்து அழகுற எழுதும் நூல்கள் பல்கிப் பெருகுவனவாக!

—பேராசிரியர் அ. மு. பரமசிவானந்தம்,
எம்.ஏ. எம்.லிட்.

# நூலாசிரியரைப் பற்றி

பெயர் : மு. பி. பாலசுப்பிரமணியன்

புனைபெயர் : மணிவேந்தன்

பெற்றோர் : மு. பிச்சைமுத்து—கனியம்மாள்

பிறந்தநாள் : 16-5-1939

பிறந்த ஊர் : அய்யாபுரம் (தென்காசி அருகில்)

மாவட்டம் : நெல்லை கட்டபொம்மன் மாவட்டம்

துணைவி : பா. இன்பவல்லி

மக்கள் : முத்துச்செல்வி (இராசசேகரன்), கலையரசி, முத்தமிழ்ச் செல்வன், அன்புச் செழியன்.

பெயரன் : மணிவண்ணன்

உடன்பிறந்தார் : பேராசிரியர் சந்திரசேகரன் (பேட்டை இந்துக் கல்லூரி), இசக்கியம்மாள் (துரைசாமி), கமலம் (நடராசன்)

கல்வி : இராமசாமிப்பிள்ளை உயர்பள்ளி, இலஞ்சி, பி.ஏ.: தூய சேவியர் கல்லூரி, பாளையங்கோட்டை எம்.ஏ. : பச்சையப்பன் கல்லூரி, சென்னை. பிஎச்.டி. : சென்னைப் பல்கலைக் கழகம்.

ஆசிரியர் : டாக்டர் மு. வரதராசனார், டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை, பேராசிரியர்கள் அ. மு. பரமசிவானந்தம், அன்புகணபதி, ஆ. அருளப்பன்.

ஆய்வு நெறியாளர் - டாக்டர் இரா. கு. நாகு. (மாநிலக் கல்லூரி, சென்னை)

பணிபுரிந்த இடங்கள் : பச்சையப்பன் ஆடவர் கல்லூரி, காஞ்சிபுரம்; கந்தசாமிக் கல்லூரி, அண்ணாநகர்,

பணிபுரியும் இடம் : பச்சையப்பன் கல்லூரி, சென்னை-30

பணியனுபவம் : இருபத்தெட்டு ஆண்டுகள் (1961—முதல்)

பெற்ற பரிசுகள் : மாணவப் பருவத்தில் (1960-ல்) சென்னை மாணவர் மன்றம், தமிழ்நாட்டு அனைத்துக் கல்லூரி மாணவர்களுக்காக நடத்திய கவிதைப் போட்டியில் முதற் பரிசு. (வெள்ளிக் கோப்பை)

1979-ஆம் ஆண்டு வெளிவந்த 'கவிதை மேகங்கள்' நூலுக்காகத் தமிழக அரசின் முதற் பரிசு ரூ. 2000, மற்றும் சான்றிதழ்.

ஆராய்ச்சிக் கருத்தரங்கு : 1968-ஆம் ஆண்டு சென்னையில் தமிழக அரசின் சார்பில் நிகழ்ந்த இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டுக் கருத்தரங்கில் கலந்துகொண்டு ஆராய்ச்சிக் கட்டுரை வழங்கியமை.

பொதுப்பணி : செங்கற்பட்டு மாவட்டத் தமிழாசிரியர் கழகத் தலைவராகப் பத்து ஆண்டுகளும், தமிழகத் தமிழாசிரியர் கழகத் துணைத் தலைவராக ஏழு ஆண்டுகளும், பல்கலைக் கழக[க் கல்லூரி] ஆசிரியர் சங்கத்தின் (AUT) சென்னை மண்டலத் தலைவராக இரண்டு ஆண்டுகளும் பணியாற்றியமை. அண்ணாநகர் பாரதி குடியிருப்பு கூட்டுறவு வீட்டு வசதி சங்கத்தின் தலைவராக இருந்து பணியாற்றி வருதல்.

தமிழ்ப்பணி : காஞ்சிபுரத்தில் தமிழாசிரிய நண்பர்களின் துணையுடன் 'காஞ்சித் தமிழ்ச் சங்கம்' தொடங்கியமை. பாரதிதாசன் இலக்கியப் பேரவையின் அமைப்பாளராக இருந்து, காஞ்சியிலும் சென்னையிலும் பல இலக்கிய நிகழ்ச்சிகளை முன்னின்று நடத்தியமை. மாநில

இலக்கிய அணியின் தலைமை நிர்வாகக் குழு உறுப்பினராக நியமிக்கப்பெற்றமை.

நாடகப்பணி : அய்யாபுரம் கிராமத்தில் 'முத்தமிழ்க் கலை மன்றம்' என்னும் நாடகக் குழுவைத் தொடங்கி, பல நாடகங்கள் எழுதி, இயக்கி, நடித்து அரங்கேற்றியமை.

இதழியல் பணி : பள்ளி மாணவப் பருவத்தில் 'எழில் என்னும் கையெழுத்து ஏடு நடத்தியமை.

திரு சி.என்.ஏ. இளங்கோவன் அவர்களை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்த, அறிஞர் அண்ணா நிறுவிய 'காஞ்சி' இதழின் கௌரவப் பொறுப்பாசிரியராக இரண்டு ஆண்டுகள் பணியாற்றியமை.

பிற : 1969-ஆம் ஆண்டு வடமாநிலம் நாகபுரி பாரதி தமிழ்ச் சங்கத்தின் சார்பிலும், நாகபுரி பல்கலைக்கழகத் தமிழ் மாணவர் சங்கம் (NUTSA) ஆய்வுக் கூட்டத்திலும் கலந்துகொண்டு சொற்பொழிவுகள் நிகழ்த்தியமை.

1970-ஆம் ஆண்டு கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கம், அவுரா வங்கத் தமிழர் சங்கம், கல்கத்தா தமிழ் மன்றம் ஆகியவை சார்பில் நிகழ்ந்த பல்வேறு இலக்கிய நிகழ்ச்சிகளில் கலந்துகொண்டு சொற்பொழிவுகள் நிகழ்த்தியமை.

சென்னை, திருச்சி வானொலி நிலையங்களிலும், சென்னைத் தொலைக் காட்சியிலும் இலக்கிய உரைகள் பல நிகழ்த்தி வருதல்.

தொகுத்தவர் : பொன். விவேகானந்தன் எம்.ஏ.,

  

# முன்னுரை

தமிழ் மொழியின் நிலைத்த வாழ்வுக்கும் வளமைக்கும் காரணமாக அமைவன, அது போற்றிக் காக்கும் இலக்கியக் கருவூலங்களே! காலந்தோறும்' தோன்றிக்கொண்டேயிருக்கும் கணக்கற்ற இலக்கியச் செல்வங்களால், காசினியில் பீடுநடை போட்டு வளர்ந்து வருவது, நம் கன்னித் தமிழ் மொழியாகும்.

தமிழன்னையின் இதழோரத்தில் நெளியும் இலக்கியப் புன்னகையே, தமிழர் தம் நெஞ்சத்தை ஈர்ப்பதிலும் மாற்றியமைப்பதிலும் வல்லமை பெற்றுத் திகழ்கிறது. அவ்விலக்கியப் புன்னகையின் ஒளி வீச்சுக்கள் சிலவே, கட்டுரை வடிவில் உங்களை நாடி வருகின்றன.

'இலக்கியப் புன்னகை' என்னும் தலைப்பினைத் தாங்கி, பதினான்கு கட்டுரைகள் இந்நூலில் பவனி வருகின்றன. அவற்றுள் பல வானொலி வழியே வலம் வந்தவை; சில இதழ்களின் மடியில் இடம் பெற்றவை; சில அண்மையில் எழுதப் பெற்றவை.

இந்நூலுக்கு அணி செய்து சிறப்பித்த அன்பு நெஞ்சங்களுக்கும், அழகிய முறையில் அச்சிட்டுக் கொடுத்த மாருதி அச்சகத்தாருக்கும், இத்துறையில் எனக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்துவரும் பாரி நிலையத்தாருக்கும், பிழைதிருத்தம் பார்த்து உதவிய புலியூர்க் கேசிகனார்க்கும் எனது உளங் கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

சென்னை-40
25-12-1986

# உள்ளடக்கம்

## 1

# இலக்கியம் ஈந்த தமிழ்

பழமையான மொழி - பண்பட்ட மொழி, நம் பைந்தமிழ் மொழி! தென்னவன் மொழி-தென்பாங்கு மொழி, தேனினும் இனிய நம் தீந்தமிழ் மொழி! தமிழ் என்றால் இனிமை; தமிழ் என்றால் எளிமை; தமிழ் என்றால் அழகு; தமிழ் என்றால் அமிழ்தம். இனிமை யான-எளிமையான-ஈடுஇணையற்ற அழகுமொழி, நம் அமுதமொழி! தமிழ்மொழி, நம் கருவிழி! தன்மானத் தமிழே, நம் தாய்த்தமிழ்!! ஊனோடு ஊனாக, உயிரோடு உயிராக, உணர்வோடு உணர்வாக ஒன்றி விட்ட மொழி, நம் உயர்தனிச் செம்மொழியாம், ஒண்டமிழ் மொழி!

எத்தனையோ மொழிகள் உலகத்தில் தோன்றி யுள்ளன. காலவெள்ளத்தைக் கடக்க முடியாமல் எத்தனையோ மொழிகள் அழிந்துபட்டன. உலகிலேயே பழமையான மொழிகள் எனப் பாராட்டப்படுபவை லத்தீன், கிரேக்கம், எபிரேயம், சீனம், தமிழ், சமஸ்கிருதம் ஆகிய ஆறு மொழிகள்தாம். அவற்றில் இன்று லத்தீன் இல்லை; கிரேக்கம் இல்லை; எபிரேயம் இல்லை; அவ்வளவு ஏன்? வடமொழியும் இன்று இல்லை. அது தெய்வத்தோடே ஒன்றிவிட்டது. பேச்சுவழக்கில் குன்றி

---

* தமிழகத் தமிழாசிரியர் கழகம் 13 ஆம் மாநில மாநாட்டு மலரில் (சேலம், 1971) வெளிவந்தது.

விட்டது. எஞ்சியிருப்பவை இரண்டே. ஒன்று தமிழ்: மற்றொன்று சீனம்! பழமை வாய்ந்த சீனமொழி, பெரும்பான்மை மக்களால் பேசப்படும் மொழியாக, இன்று உயிர் வாழ்கிறது. அதுவும், 'வாழும் மொழி' யாகத்தான் வையத்தில் இலங்குகிறதே ஒழிய 'வளமான மொழி'யாக விளங்க இயலவில்லை. பெரும்பான்மை மக்கள் அதனைப் பேசுகிறார்களே ஒழிய, பெருமைப் படத்தக்க அளவுக்கு அதில் இலக்கணமோ, இலக்கியமோ அமையவில்லை என்பர்.

ஆனால், அழியாத மொழியாக, எத்தர்களின் சூழ்ச்சியினால் சிதையாத மொழியாக, அன்றுமுதல் இன்றுவரை ஒரே நிலையில் உயிர்ப்புடன் வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரேமொழி நம் தமிழ்மொழிதான். காலத்தின் கடுவேகத்திலும் தன் கோலத்தின் எழில் சிறிதும் குன்றாத சீலத்திருமொழி நம் செழுந்தமிழ் மொழியாகும். இன்றும் தமிழர்தம் இல்லத்தின் மொழி யாக, வெல்லத்தின் இனிமையுடன் விளங்குவது தமிழ் தானே! ஆம்! தம்+இல்+மொழி = தமிழ் (தம்முடைய இல்லத்து மொழி) என்பது மொழி நூலறிஞர் பாவாணர் கருத்தாகும்.

"ஆரியம்போல் உலகவழக்கு அழிந்து ஒழிந்து சிதையாஉன்
சிரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே!"

என அன்னைத் தமிழின் கன்னித் தன்மையை நினைந்து வியந்து போற்றுகிறார் பேராசிரியர் சுந்தரம்பிள்ளை; எல்லையிலாப் பரம்பொருளைப்போல் இலங்கும் தமிழ் அன்னையின் இளமைத் தன்மையினை எண்ணித் தன்னை மறந்து வாழ்த்துகிறார். தமிழ் அன்னை, 'மக்கள்' ஆகிய நம்மை மட்டும் ஈன்றெடுக்கவில்லை. 'மொழி'களையே ஈன்றெடுத்த 'முதல்வி' அவள்!

தமிழர்களாகிய நமக்கு மட்டுமா, அவள் அன்னை? கன்னடம், தெலுங்கு, மலையாளம், துளு போன்ற மொழிகளுக்கும் அவள் அன்னையன்றோ? பல மொழிகளை ஈன்றெடுத்த பெருமை தமிழைப்போல் இன்னொரு மொழிக்கும் உண்டு; அம் மொழிதான் வடமொழி! ஆனால், ஒரு வேறுபாடு! பல மொழிகளை ஈன்றெடுத்த பின்னும் ஒப்பற்ற மொழியாக இன்றும் உயிர் வாழ்வது தமிழ்! அதனாற்றான், செந்தமிழ் அன்னையின் சீரிளமைத் திறம் வியந்து செயல்மறந்து வாழ்த்துகிறார் சுந்தரம் பிள்ளை.

"என்றுமுள தென்றமிழ்" என்பது கவிஞன் நோக்கு-கம்பன் வாக்கு. என்றைக்குமே அழியாத தமிழ்—யாராலும் அழிக்க முடியாத தமிழ்—நம் இன்பத் தமிழ்! ஆம்! ஓங்கு புகழ்கொண்டு பாங்குடன் திகழும் பைந்தமிழுக்குத் தீங்கு என்பதே இல்லை.

தமிழைப் போன்றதோர் இனிய மொழி இத்தரணி யிலேயே இல்லை. "யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவ தெங்கும் காணோம்" என மாத்தமிழின் மாண்பினை மாநிலம் அறியப் பாடுகிறார், பன்மொழி அறிந்த பாரதியார். தமிழின் இனிமைக்கு அதன் உச்சரிப்பு எளிமையும் ஒரு காரணம் ஆகும். ஆங்கிலம் 26 எழுத்துக்களைக் கொண்டதுதான். ஆனால் உச்சரிப்போ, எண்ணிக்கையில் அடங்காது. தமிழ் 247 எழுத்துக்களைக் கொண்டது (தேவையில்லா எழுத்துக்களையும் சேர்த்து) ஆனால், உச்சரிப்புமுறை மிக எளிது. எழுத்துக்களின் ஒலிகளுக்கேற்ப நாம் தமிழில் உச்சரிக்கலாம். அதனாற்றான், செக்கோசுலா வாக்கிய நாட்டைச் சேர்ந்த தமிழ் அறிஞர் கமில்சுவெலபில், "உலகில் எந்த மொழி வரிவடிவத்திலும்

காணப்படாத தனிச் சிறப்புகளைத் தமிழ் வரிவடிவத்தில் காணலாம். ஆங்கிலத்தில் அத்தகைய அழகு கிடையாது. தமிழில் ஓர் எழுத்தினை உச்சரிக்கும்போது எழுகின்ற ஓசை நயத்திற்கேற்ப அதன் வரிவடிவமும் அமைந்திருக்கும்'' என, அருந்தமிழ் மொழியின் உச்சரிப்பு அழகினை வியந்து பாராட்டுகின்றார். இந்த உச்சரிப்பு எளிமைக்காகத்தான் இலக்கண நூலார் 'மாத்திரை அளவும்' வகுத்துள்ளனர்.

எழுத்துக்களை 'உயிர்' என்றும், 'மெய்' என்றும், இரண்டும் இணைந்தால் 'உயிர்மெய்' என்றும் பாகுபாடு செய்திருக்கும் சிறப்பு தமிழ்மொழிக்கே உரியது. வல்லினம், மெல்லினம், இடையினம் என்ற மூவகை இனத்தின் மொத்த உருவாகத் 'தமிழ்' என்னும் சொல்லே இலங்குகின்றதன்றோ?

[த - வல்லினம்; மி - மெல்லினம்; ழ் - இடையினம்]

'தமிழ்' என்ற சொல் மட்டுமா? தமிழ் மொழியில் உள்ள அத்தனை சொற்களுமே முத்துக்கள்தாம்.

''சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே - அதைத்
தொழுது படித்திடடி பாப்பா''

என்பது பல்வேறு மொழிச் சொற்களை அறிந்து, பாரதி சொன்ன அமுத வாக்கன்றோ?

பண்டைத் தமிழர் தாம் பேசும் மொழியைத் 'தமிழ்' என்னும் சொல்லால் மட்டுமா வழங்கினர்? மூவகைத் தமிழ் உண்டு என உணர்ந்து 'முத்தமிழ்' எனவும் முழங்கினர்.

''எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காத தமிழென்று சங்கே முழங்கு''

என்ற பாவேந்தரின் சங்கநாதம், இலக்கியமாக ஏட்டிலிருக்கும்போது, 'இயற்றமிழ்' ஆகிறது; அதுவே இனிய ஓசையோடு இசையமைத்துப் பாடப்படும்போது, 'இசைத் தமிழ்' ஆகிறது; நாடக நாயகனின் நாவில் உணர்ச்சியோடு உரையாடலாக வெளிவரும்போது 'நாடகத் தமிழ்' ஆகிறது.

தமிழ் 'ஒன்று' தான்; ஆனால் வெளிப்படும் முறை 'மூன்று' அல்லவா? உலகில் வேறு எந்த மொழியும் இங்ஙனம் அழைக்கப்படுவதில்லை, அம்மொழிகளில் இயல், இசை, நாடகம் இருக்கலாம். ஆனால், அப் பாகு பாடுகளைப் பகுத்து அறிந்து மொழியோடு சேர்த்துப் பயன்படுத்தும் முன்னோடி அறிவுத்திறன் அவர்களிடம் இல்லை என்பது வெள்ளிடை மலை!

மேலும் இலக்கண அமைப்பிலும் 'புதுமை' கண்ட பெருமை தமிழ்மொழிக்கே உண்டு. தொல்காப்பியர் எழுத்து, சொல், பொருள் என மூன்று அதிகாரங்களாக அமைத்துத் தமிழுக்கு இல்க்கணம் வகுத்தார். தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் வரும் 'செய்யுளியல்' பிற்காலத்தில் 'யாப்பு' எனவும், 'உவமவியல்' விரிவடைந்து 'அணி' எனவும், தனித்தனி இலக்கணங்களாக ஆயின. இங்ஙனம் தமிழ்மொழி யானது எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என ஐந்திலக்கணங்களைக் கொண்டு, அவனியில் சுடர்விட லாயிற்று. உலகில் உள்ள ஏனைய மொழிகளில் எழுத்துக்கு இலக்கணம் உண்டு; சொல்லிற்கு இலக்கணம் உண்டு; யாப்பு, அணிகளுக்குக்கூட இலக்கணம் உண்டு; ஆனால், 'பொருளுக்கு' இலக்கணம் வேறு எம்மொழியிலும் இல்லை. 'பொருள்' என்னும் இலக்கணத்தின் பொருளே வேற்று மொழியினருக்குப் புரியாது. தமிழ் மொழி

ஒன்றுதான், 'வாழ்வுக்கே இலக்கணம்' அமைத்து வையத்தில் சிறந்து மிளிரும் வளமான மொழியாகும். மானிட வாழ்க்கையையே 'அகம்', 'புறம்' என இருவகைப் படுத்தி இலக்கணங் கண்ட பெருமை தமிழ்மொழி ஒன்றுக்குத்தான் உண்டு.

தொல்காப்பியம் அகத்திணையியலும், நம்பியகப் பொருளும் 'அகப்பொருள்' இலக்கணங் கூறும் அருந் தமிழ்க் களஞ்சியங்கள்! தொல்காப்பியம் புறத்திணை யியலும், புறப்பொருள் வெண்பாமாலையும் 'புறப் பொருள்' இலக்கணங் கூறும் பைந்தமிழ்ப் பெட்டகங் கள்! காதல் வாழ்வுக்கு அகப்பொருளும், வீர வாழ்வுக்குப் புறப்பொருளும் என, வாழ்க்கைக்கே இலக்கணம் வகுத்த பெருமை வையத்தில் வண்டமிழ் மொழிக்குத்தான் உண்டு. இதுவும் வேறு எம்மொழியிலும் இல்லாத தனிச் சிறப்பு ஆகும். வேற்றுமொழி இலக்கியங்களில் காதலும், வீரமும் கூறப்பட்டிருக்கலாம். ஆனால், இலக்கண அடிப் படையில் கூறப்பட்டிருக்காது. இலக்கணக் கண் கொண்டு வாழ்வை ஆய்ந்து நோக்கிய பெருமைக்குரிய ஒரே இனம், தமிழினம்தான்!

வாழ்வுக்கே இலக்கணம் வகுத்த வண்டமிழ் மொழி யில், பழந்தமிழர் வாழ்வைப் படம் பிடித்துக் காட்டும் வளமான இலக்கியங்களுக்கும் குறைவில்லை. இலக்கியம் கள் என்னும் சஞ்சீவியால்தான் தமிழ்மொழி இன்றள வும் 'சிரஞ்சீ'வியாக வாழ்ந்து கொண்டிருக்கிறது. தமிழ் மொழியில் உள்ள இலக்கியங்களைப் படித்த வெளி நாட்டார் வியந்து பாராட்டுகின்றனர். 'சோவியத் நாடு' இதழில் (அக்டோபர் 1961) அறிஞர் செலிஷேவ், "இந்தியாவின் தொன்மைசால் மொழியான தமிழ் மொழியும் தமிழ் இலக்கியங்களும் ரஷ்ய மக்களிடம்

மிகவும் பிரபலம் அடைந்து வருகின்றன!" என்று குறிப்பிட்டுள்ளார். ஆந்திர மாநிலத்தைச் சேர்ந்த திரு. சி. ஆர். ரெட்டி, "ஈடு இணையற்ற சிலப்பதிகாரம், மணிமேகலை என்னும் இரண்டு காவியங்களைப் பெற்றுள்ள 'தமிழ்' மீது, ஆந்திரன் என்ற முறையில் பொறாமைப் படுகிறேன். மொழிபெயர்ப்பில்கூட அழகோடும் உயிர்ப் போடும் அவை சிறந்து மிளிர்கின்றன. அப்படியாயின் மூலத்தில் (தமிழில்) எத்துணைச் சிறப்போடு மிளிரும்?" எனச் செந்தமிழ் இலக்கியங்களான சிலப்பதிகாரத்தையும் மணிமேகலையையும் பாராட்டுகின்றார்.*

இத்துணைச் சிறப்புகளோடு தமிழ்மொழி இலங்குகின்ற காரணத்தால்தான். தம் மதத்தைப் பரப்ப வந்த மேலைநாட்டார், மறத் தமிழின்பால் மாறாக் காதல் கொண்டு தமிழ் இன்பம் துய்த்தனர். கால்டுவெல், வீரமாமுனிவர் போன்றோரைக் காந்தம்போல் கவர்ந்து இழுத்த பெருமை தமிழ்மொழிக்குத்தானே உண்டு. தன் கல்லறை மீது 'தமிழ் மாணவன்" எனப் பொறித்திட விழைந்த போப் பாதிரியார் வெளிநாட்டைச் சேர்ந்தவர் தானே! வெளிநாட்டினர் மட்டும்தானா தமிழைப் போற்றினர்? நம் நாட்டில் வெளிமாநிலத்தார் கூடத் தமிழ் மொழியின் சிறப்பினை உணர்ந்து போற்றி யுள்ளனர். அகில இந்திய எழுத்தாளர் மாநாட்டில் வெளி மாநில அறிஞர் ஹஸ்ரட் சுகர்வர்த்தி, "இந்தியா

---

*. "As an Andhra I envy Tamil, its possession of two such poems of Silappadhikaram and Manimekalai for which I can find no equivalents in Telugu Literature. Even in Translation they dominate the soul like charm. What must they be like in the original"

—C. R. REDDY.

விலேயே மொழி என்ற நிலையில் உயர்வின் உச்சத்தை அடைந்துள்ள ஒரே மொழி தமிழ்தான். அதனால் அதனை மிகவும் மதிக்கிறேன். அது வளரவேண்டிய ஒரு மொழி அன்று, கனிந்த முதிர்ச்சியைப் பெற்றுவிட்ட முழுமையான மொழி'' என்று, தமிழின் மாண்பினைத் தெள்ளத் தெளிவாக எடுத்து மொழிந்துள்ளார்.*

இங்ஙனம் வெளிநாட்டவரும் வெளிமாநிலத்தவரும் வணங்கிப்புகழும் வண்டமிழ் மொழியினை, இருபதாம் நூற்றாண்டுப் 'புதுயுக' மொழியாக வளர்க்க வேண்டியது நம் பொறுப்பாகும். மெய்ஞ்ஞானம் நிறைந்த தமிழ் மொழியை, விஞ்ஞானம் நிறைந்த மொழியாக—அறிவு இலக்கியங்கள் மலிந்துள்ள தமிழ் மொழியை, அறிவியல் நூல்கள் மலிந்துள்ள 'நவீன' மொழியாக ஆக்க வேண்டியது நம் கடமையாகும். அதற்குரிய வழிகளில் ஒன்று, கல்லூரிப் பயிற்றுமொழியாக அதனை ஆக்குவதாம்.

ஏனைய மொழிகளெல்லாம் பயிற்றுமொழி எனும் தகுதியுடன் அவனியில் பவனி வரும்போது, ஆற்றலுள்ள மொழியான தமிழ்மொழிக்கு இன்னும் அத்தகுதியினை 'முழு அளவில்' வழங்காமல் இருத்தல் முறையன்று. டாக்டர் மு. வ. அவர்கள், ''காலத்திற்கு ஏற்ற மாறுதல்

---

*. "I give much respect to Tamil because it is the only. language in India which as a language reached its apex. It is not a language in process. It is a full fledged language. Ih short, we can call it a complete language which has developed in its full"

—HASRAT SUHARWARDY

[All India Writer's Conference]

செய்துகொண்டு முன்னேறுவதே கடமை. தமிழைப் பயிற்சிமொழி ஆக்குவதை நெடுநாள் தள்ளிப்போட முடியாது. என்றேனும் ஒருநாள் அது முழுமைபெற்றே தீரும்'' என்று உறுதியுடன் அறுதியிட்டு உரைக்கின்றார். உணர்ந்து செயல்படவேண்டியது, ஒவ்வொரு தமிழனின் கடமையாகும்.

அமிழ்தத்தைக் கடைந்தால் அதிலிருந்து கிடைக்கும் அரிய சொல்லே 'தமிழ்' என்று போற்றுகின்றார் நாமக்கல் கவிஞர். ''இருந்தமிழே உன்னால் இருந்தேன் இமையோர் விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்'' என்றார் தமிழ் உணர்வுமிக்க 'தமிழ்விடுதூது' ஆசிரியர். ''தெள்ளுற்ற தமிழமுதின் சுவை கண்டார், இங்கமரர் சிறப்புக் கண்டார்'' எனத் தமிழை அமிழ்தமாகச் சுவைத்தார் பாரதியார்.

''தமிழுக்கு அமுதென்று பேர் - அந்தத்
தமிழ்இன்பத் தமிழ்எங்கள் உயிருக்கு நேர்''

என்று தமிழை அமிழ்தமாகவும் உயிராகவும் மதித்தார் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன்.

அமிழ்தமான தமிழை அகத்தில் நினைப்போம்! உயிரான தமிழை உள்ளத்தில் கொள்வோம்! ''தமிழ் எங்கள் உயிர்'' என்ற உணர்வோடு வாழ்வோம்! உயிர் இன்றேல் உடல் இல்லை! தமிழ் இன்றேல் நாம் இல்லை!! தமிழ் மானம் காப்போம் - நம் தாய் மானம் காப்போம்! எத்தனையோ இலக்கியங்களை ஈன்றெடுத்த நம் முத்தனைய தமிழ் மொழியை, நாம் நெஞ்சாரப் போற்றுவோமாக,

## 2

# சிறுபாணாற்றுப்படை இலக்கிய நயங்கள்

"அறிவை மட்டும் வெளிப்படுத்த வேண்டுமெனில் மொழிமட்டும் போதும். ஆனால், அறிவோடு உணர்ச்சியை ஊட்டவேண்டுமெனில் மொழிமட்டும் இருந்தால் போதாது. அதோடு ஓசை ஒலிநயம், வருணனை முதலியனவும் இருத்தல் வேண்டும்" என்று டாக்டர் மு. வரதராசனார் கூறியுள்ளார். கவிதை என்றால் வெறும் சொல்லடுக்குகளாக இருந்தால் மட்டும் போதாது. அதற்குச் சுவையூட்டுகின்ற விதத்தில் இனிய ஓசை, ஒலிநயம், வருணனை முதலியனவும் இடம் பெறவேண்டும். அப்போதுதான் கவிதையின் மூலம் படிப்போர் உள்ளத்தில் உணர்ச்சியை ஊட்ட முடியும். எனவே, புலவர்கள் கவித்திறனும் வருணனைத்திறனும் பெற்றிருந்தால்தான் சுவையான இலக்கிய விருந்தினைப் படைத்திட இயலும்.

நல்லூர் நத்தத்தனார் கவித்திறனும் வருணனைத் திறனும் ஒருங்கே பெற்றுள்ள ஒப்பற்ற தமிழ்ப் புலவர். அவர் இயற்றிய சிறுபாணாற்றுப்படை அதற்குச் சான்றாகத் திகழ்கிறது. பாடலின் தொடக்கத்திலேயே நிலமகளை மிக அழகாக வருணித்துள்ளார். பெண்களைப் போலவே நிலமடந்தையும் காட்சி யளிப்பதைக் கவிநயத்துடன் கூறியுள்ளார். நிலமகளைப் பார்த்தவுடன் ஒரு பெண்ணைப் பார்ப்பது போன்ற

---

* 'நித்திலக் குவியல்' (1965) இதழில் வெளிவந்தது.

நினைவு புலவருக்கு வருகிறது. மூங்கிலை, நிலமகளின் தோளாகவும், மலையினை அவளது மார்பகமாகவும் காண்கிறார். பெண் என்றால் அணிகலன் எதுவும் இல்லாமல் இருக்கக்கூடாதல்லவா? அதற்காக நிலம் களின் மார்பிலேயும் அணிகலன் இருக்கின்றதா என்று பார்க்கிறார். மலையிருந்து பாய்ந்துவரும் காட்டாறு அருவியாக வீழ்வதைக் காண்கிறார். அதனை நிலமகளின் மார்பிலே கிடந்து அசைகின்ற முத்தாரமாக நினைத்துக் கொள்கிறார். அந்தக் காட்டாற்றின் கரையில் ஒரு பொழில் இருக்கிறது. அந்தப் பொழிலிலுள்ள குயில்கள் வாடிய பூக்களை மரங்களிலிருந்து உதிர்க்கின்றன. அந்தப் பூக்களைத்தான் நிலமகள் தன் தலையிலே சூடிக்கொண்டிருக்கிறாள். ஆற்றங்கரையில் பரந்து கிடக்கிறதே கருமணல், அதுதான் நிலமகளின் விரிந்து கிடக்கின்ற கூந்தலாகும். இவ்வாறு நிலமகளை,

"மணிமலைப் பணைத்தோள் மாநில மடந்தை
அணிமுலைத் துயல்வரூஉம் ஆரம் போல,
செல்புனல் உழந்த சேய்வரல் கான்யாற்றுக்
கொல்கரை நறும்பொழில் குயில்குடைந்து உதிர்த்த
புதுப்பூஞ் செம்மல் சூடி, புடைநெறித்து.
கதுப்புவிரித் தன்ன காழ்அக நுணங்கு அறல்" (1—6)

என்று பெண்ணாக உருவகப்படுத்தும் இடத்தில் நத்தத்தனாரின் வருணனைத் திறனைக் காண்கிறோம்.

வாள்நுதல் விறலியரைக் கேசம் முதல் பாதம்வரை மிகுந்த எழிலுடன் கவிஞர் வருணித்துள்ளார். கருமேகம் போன்ற கூந்தலையும், ஆண்மயில் ஓடி ஒளிவதற்குக் காரணமான சாயலையும். நாயின் நாக்கைப்போன்ற பாதங்களையும், யானையின் துதிக்கையைப்போன்ற

இரண்டு தொடைகளையும், வாழைப்பூவைப்போன்ற மயிர் முடிப்பினையும், வேங்கை மரத்தின் மலர்போன்ற தேமலையும், கோங்கு மரத்தின் மொட்டுக்களைப் போன்ற மார்பகங்களையும், பனைநுங்கின் இனிய நீர் போன்ற உமிழ்நீரைச் சுரக்கின்ற பற்களையும், முல்லை மலர் சூடுகின்ற ஒழுக்கம் நிறைந்த கற்பினையும், மான் போன்ற பார்வையையும், ஒளிபொருந்திய நெற்றியையும் உடையவராக 'ஆடல் மகளி'ரான விறலியரை நம் கண்முன்னே படம்பிடித்துக் காட்டுகிறார் நத்தத்தனார். இதில், உவமைநயமும் வருணனைத்திறனும் போட்டி போடுவதைக் காணலாம்.

சேரநாட்டின் செழிப்பும் சிறந்த முறையில் சிறுபாணாற்றுப் படையில் வருணிக்கப்படுகிறது. மருத நிலமானது வளப்பம் பொருந்தியதாக இருக்கிறது. நீர்வளம் மிகுந்திருந்த காரணத்தால் மீன்கள் நிறைந்து காணப்படுகின்றன. செங்கழுநீர்ப் பூக்களோ செழுமையாகப் பூத்துத் திகழ்கின்றன. அந்தப் பூக்களை மேய்ந்து தின்பதற்காக எருமை மாடு நடந்து செல்கிறது. அதனுடைய கால்களில் பட்டு மீன்கள் துண்டாகின்றன. அவ்வாறு மீன்கள் துண்டாகும்படி நடந்து சென்று, செங்கழுநீர்ப் பூக்களை மேய்கின்றது. பின்பு மிளகுக்கொடி படர்ந்திருக்கின்ற பலாமரத்தின் நிழலில் போய்ப் படுக்கிறது. காற்றால் அசைந்துகொண்டிருக்கின்ற மஞ்சள் செடியின் இலை, அதன் முதுகினை மெல்லத் தடவிக்கொடுக்கிறது. அந்த இனிமையான சூழ்நிலையில் எருமை மாடு செங்கழுநீர்ப் பூக்களை அசைபோட்டுத் தின்கிறது. உடனே அதற்குத் தூக்கம் வந்துவிடுகிறது. அருகில் காட்டுமல்லிகை மலர்களால் ஆகிய படுக்கையைப் பார்க்கிறது. அந்தப் படுக்கையில்போய் இனிமையாகப்

படுத்துத் தூங்குகிறது. சேர நாட்டில் எருமை மாடு தூங்குகின்ற அந்தக் காட்சியை,

''கொழுமீன் குறைய ஒதுங்கி, வள்இதழ்க்
கழுநீர் மேய்ந்த கயவாய் எருமை
பைங்கறி நிவந்த பலவின் நீழல்,
மஞ்சள் மெல்இலை மயிர்ப்புறம் தைவர,
விளையா இளங்கள் நாற, மெல்குபு பெயரா
குளவிப் பள்ளிப் பாயல் கொள்ளும்'' [41—46]

என்ற வரிகளில் வருணித்துள்ளார்.

சோழ நாட்டின் மருதநில வளத்தைப் பாடும் போதும் நத்தத்தனாரின் வருணனைத் திறன் நன்கு வெளிப்படுகிறது. நறுமணம் கமழும் நீர் நிரம்பிய ஒரு பொய்கை; அதன் கரையில் நெருங்கி வளர்ந்த கடப்ப மரங்கள்; அந்த மரங்களில் மாலைபோல மலர்ந்துள்ள மலர்கள்; அந்த மலர்களிலிருந்து சிவந்த மகரந்தப் பொடி சிந்துகின்றது. அந்த மகரந்தப்பொடி பெண்களின் மார்பகம் போன்ற தாமரை மொட்டில் வீழ்கின்றது. அதனால் தாமரைமொட்டு உடைந்து, அழகிய முகம்போல மலர்கின்றது. அதுவோ செந்தாமரை மலர்; அதில் சிவந்த மகரந்தப்பொடியும் சேர்ந்ததால் மேலும் சிவப்பாகத் தோற்றமளிக்கிறது. ஆதலால் உள்ளங்கையில் சாதிலிங்கம் தோய்த்ததைப் போலச் சிவந்த இதழ்கள் காட்சியளிக்கின்றன. அந்த இதழ்களுக்கு நடுவில் தாமரை மலரின் பொகுட்டு இருக்கிறது. அது செம்பொன்னால் செய்த பீடம்போல் காட்சியளிக்கிறது. அந்தப் பீடத்தில் ஓர் ஆண்வண்டு தன் பெண்வண்டினை அணைத்துக் கொண்டிருக்கிறது. அந்த வண்டுகள் இரண்டும் சிறகுகளை அசைத்துக் கொண்டு, சீகாமரம் என்னும் பண்ணை இசைத்துக்

கொண்டிருக்கின்றன. அவ்வாறு இணைந்திருக்கும் வண்டுகள் இனிய இசையை எழுப்பிக்கொண்டிருக்கின்ற மருத நிலத்தை,

"திருமுகம் அவிழ்ந்த தெய்வத் தாமரை,
ஆசுஇல் அங்கை அரக்குத்தோய்ந் தன்ன
சேயிதழ் பொதிந்த செம்பொன் கொட்டை
ஏம இன்துணை தழீஇ, இறகு உளர்ந்து,
காமரு தும்பி காமரம் செப்பும்" (73-77)

என்ற அடிகளில் வருணித்துள்ளார்.

பாணனின் வீட்டிலுள்ள வறுமை நிலையைச் சித்தரிக்கும்போது நத்தத்தனாரின் வருணனைத் திறன் புதுமெருகுடன் காணப்படுகிறது. வறுமைக் காட்சியை அவ்வளவு நயம்பட வருணித்துள்ளார் அவர். சமையல் அறையில் நாய் குட்டிபோட்டிருக்கிறது. குட்டிகளோ இன்னும் கண்களைத் திறக்கவில்லை; செவிகளும் சாய்ந்துதான் இருக்கின்றன. ஏனென்றால், அப்போதுதான் பிறந்த குட்டிகள் அவை. தாய் நாயின் முலைக்காம்பை அந்தக் குட்டிகள் சுவைக்கின்றன. தாய் நாயினால் அதைப் பொறுக்க முடியவில்லை. உணவு ஏதும் கிடைக்காததால் அதனிடம் பால் இல்லை. பசித்துன்பம் காரணமாகக் குரைத்துக் கொண்டிருக்கிறது. பாணன் வீட்டுச் சமையல் அறையில் இருக்கும் நாயின் நிலை அது. அந்த வீட்டிலுள்ள கொம்புகளோ வீழ்ந்து கொண்டிருந்தன; சுவரோ பழமையான சுவர்; கரையான் கூட்டங்களுக்குக் குறைவு இல்லை. கரையான் அரித்ததால் சுவர்களில் புழுதிகள் மிகுந்து விட்டன. அந்தப் புழுதிகளில் காளான்கள் பூத்திருக்கின்றன. வீட்டுத் தலைவி குப்பைமேட்டிற்குச் சென்று வேளைக் கீரையைக் கிள்ளி எடுத்து வருகிறாள். உப்பு வாங்கு

வதற்குக்கூடப் பணம் இல்லை. ஆகையால் உப்பு இல்லாமலே கீரையை வேக வைக்கிறாள். யாராவது பார்த்து விடுவார்களே என்பதற்காகத் தலைவாசல் கதவை அடைத்துவிட்டு, சுற்றத்தாரோடு ஒன்றாக இருந்து உப்பு இல்லாமல் வேகவைத்த கீரையை உண்கிறார்கள். இவ்வாறு வறுமை நிலையை மிக அழகாகப் படம்பிடித்துக் காட்டுகிறார் கவிஞர்.

எயிற்பட்டினத்திற்குச் செல்லும் நெய்தல் நெடு வழியை வருணிக்கும் இடத்தில், நத்தத்தனாரின் கவிநயமானது களிநடம் புரிவதைக் காணலாம்:

"அலைநீர்த் தாழை அன்னம் பூப்பவும்
தலைநாள் செருந்தி தமனியம் மருட்டவும்
கடுஞ்சூல் முண்டகம் கதிர்மணி கழாஅலவும்
நெடுங்காற் புன்னை நித்திலம் வைப்பவும்
கானல் வெண்மணல் கடல்உலாய் நிமிர்தர
பாடல் சான்ற நெய்தல் நெடுவழி" (146-151)

என நெய்தல் நிலத்தை இனிய ஓசை நயத்துடன் எழிலாக வருணித்துள்ளார். ஆசிரியப்பாவிற்குரிய 'அகவலோசை'யில் இவ்வளவு இனிமை இருக்கிற தென்றால், அதற்கு நத்தத்தனாரின் கவித்திறன்தான் காரணம். தாழைமரம், அன்னத்தைப்போலப் பூத்துத் திகழ்கிறது; செருந்தி பொன்போல் மலர்ந்துள்ளது; கழிமுள்ளி, நீலமணிபோலப் பூத்து விளங்குகிறது; புன்னைமரம் முத்துப்போன்ற மொட்டுக்களைப் பெற்றிருக்கிறது. அப்படிப்பட்ட கடற்கரை மணலின் மேல் கடல் அலைகள் ஓடி விளையாடுகின்றன; புலவர் கள் கண்டால் புகழ்ந்து பாடுகின்ற விதத்தில் நெய்தல் நிலத்தின் நீண்ட வழியானது தோற்றமளிக்கிறது. இதுதான் நெய்தல் நில வருணனை!

நெய்தல் நிலத்தைப் போலவே முல்லை நிலத்தையும்,

"பைந்நனை அவரை பவழம் கோப்பவும்,
கருநனை காயாக் கணமயில் அவிழவும்,
கொழுங்கொடி முசுண்டை கொட்டம் கொள்ளவும்
செழுங்குலைக் காந்தள் கைவிரல் பூப்பவும்
கொல்லை நெடுவழிக் கோபம் ஊரவும்
முல்லை சான்ற முல்லைஅம் புறவின்" (164-169)

என்ற வரிகளில் வருணித்துள்ளார். அவரைச்செடி, பவழத்தைக் கோத்தாற்போலப் பூத்துத் திகழ்கிறது. காயா, மயிலின் கழுத்துப்போலப் பூக்களை மலரச் செய்கிறது. முசுண்டைக்கொடி, ஓலைப்பெட்டி போலப் பூத்துள்ளது. காந்தள் பூ, கைவிரல்போல மலர்ந்துள்ளது. முல்லை நிலத்தின் நீண்ட வழிகளில் இந்திரகோபப் பூச்சிகள் ஊர்ந்து செல்கின்றன. அப்படிப்பட்ட முல்லை ஒழுக்கத்திற்கு ஏற்ற முல்லைக்கொடிகள் படர்ந்துள்ள அழகிய முல்லைநிலக்காடு எனப்பாடியுள்ளார். இயற்கையோடு இயைந்த இசையோடும், இனிய கவிநயத்தோடும் நெய்தல் நிலத்தையும், முல்லை நிலத்தையும் நத்தத்தனார் வருணித்துள்ளார்.

இவ்வாறு சிறுபாணாற்றுப்படையில் இனிய ஓசை உண்டு; ஒலிநயம் உண்டு; கவிநயம் உண்டு; வருணனைத் திறன் உண்டு. நல்லூர் நத்தத்தனாரின் கவித்திறனையும் வருணனைத் திறனையும் சிறுபாணாற்றுப்படை என்ற கண்ணாடி மூலமாக நாம் நல்ல முறையில் கண்டு களிக்கலாம்; அவர் படைக்கும் இலக்கிய விருந்தையும் உண்டு மகிழலாம்.

3

# புறநானூற்று வீரம்

புறநானூற்றில் பண்டைத் தமிழர் வீரம் பொலிவும் வலிவும் பெற்றுத் திகழ்வதைக் காணலாம். போர் எனக் கேட்டவுடன் புலியெனச் சீறிப் பொங்கியெழும் புகழ் மறவர் பட்டாளத்தைப் புறநானூற்றில் காணலாம். தமிழர் வீரத்தினை இத் தரணியறியச் செய்யும் தீர இலக்கியமாகப் புறநானூறு திகழ்கிறது. வீறு கொண்டெழும் வேங்கைநிகர் மறவர்களின் வீரச் செயல்களைப் படம்பிடித்துக் காட்டும் இலக்கியக் கண்ணாடியாகத் திகழ்ந்து, இருபதாம் நூற்றாண்டுத் தமிழர்க்குப் புத்துணர்ச்சி ஊட்டும் புரட்சி இலக்கியமாகவும் புறநானூறு திகழ்கிறது.

பண்டைத் தமிழ் மறவர், போரென்றால் பொங்கியெழும் பண்பினர்; உள்ளத்தில் உவகையும் உடலில் வலிமையும் பெற்றுத் திகழும் மரபினர். இதனைக் கோவூர்கிழார் பாடல் நமக்குத் தெரிவிக்கின்றது:

''போரெனில் புகலும் புனைகழல் மறவர்
காடிடைக் கிடந்த நாடுநனி சேய
செல்வேம் அல்லேம் என்னார்......'' [புறம். 31]

வீரக் கழலை அணிந்திருக்கும் வேங்கை நிகர் தமிழ் மறவர் விருப்புடன் போர்க்களம் நோக்கிப் புறப்படுவர். 'நெடுந்தொலைவில் பகைவரின் நாடு; இடையிலோ பாழும் காடு; கடந்து செல்வதோ பெரும் பாடு; யாம் செல்லமாட்டோம்' என்று மறந்தும் கூறமாட்டார்கள்.

---

* 6-9-1970 'காஞ்சி' இதழில் வெளிவந்தது.

அத்தகைய போர் வேட்கை கொண்டவர்கள் புறநானூற்றுத் தமிழர் என அறிகிறோம், ஆற்றல் பெறுகிறோம்.

போர்க்களத்திலும்கூட 'என்னுடைய முறையானது வரட்டும்' என்று காத்திருக்காது. தாமே விரைந்து சென்று, பகைவருடைய படையினை விலக்கி, வீரப்போர் புரிந்து வெற்றிக் கனியைக் கொய்துவரும் ஆற்றல் பெற்றவர்களாகத் திகழ்ந்தனர்.

''என்முறை வருக என்னான், கம்மென
எழுதரு பெரும்படை விலக்கி
ஆண்டும் நிற்கும் ஆண்தகை யன்னே'' [புறம். 292]

என்னும் பாடல் அத்தகைய புலிமறவன் ஒருவனை நம் மனக்கண்முன் கொண்டுவந்து நிறுத்துகின்றதன்றோ!

போர் செய்யப் புறப்படுவதற்கு முன்பே பசு, அறவோர், பெண்டிர், பிணியுடையோர், புதல்வரைப் பெறாதோர் முதலானோரைப் பாதுகாப்பான இடம் நோக்கிச் செல்லுமாறு அறிவிப்புக் கொடுக்கும் அறப் போர் முறையும் அன்றிருந்தது-(புறம்9). 'எம் அம்பு கடி விடுதும் நும் அரண் சேர்மின்' என அறிவித்த பின்னரே, பகைநாட்டின்மீது படையெடுத்துச் செல்லும் பழக்கம் இருந்தது. அறம் செல்லும் வழியில் பண்டைத் தமிழரின் மறமும் செல்வதாயிற்று. 'வஞ்சினம்' கூறிப் போருக்குப் புறப்படும் வழக்கமும் அன்றிருந்தது.

''என்னொடு பொருதும் என்ப அவரை
ஆரமர் அலறத் தாக்கித் தேரொடு
அவர்புறம் காணேன் ஆயின், சிறந்த
பேரமர் உண்கண் இவளினும் பிரிக'' [புறம். 71]

என்பது பூதப் பாண்டியனின் புறப்பாடல்: ''பொருத வரும் புல்லரைப் புறம் காண்பேன்; இல்லையெனில், என்

இனிய துணைவியை விட்டுப் பிரிவேன்'' என வஞ்சினம் கூறும் வரிவேங்கையின் திறம் கூறும் வண்டமிழ்ப் பாடல்!!

தமிழ்மன்னர் பெரும்படை உடையராய்த் திகழ்ந்தனர். சோழன் நலங்கிள்ளியின் பெரும்படையின் தன்மையை அழகுபடக் கூறுகிறார் ஆலத்தூர் கிழார். பகைவரைக் கிள்ளி எறிய, கிள்ளியின் படை புறப்படுகிறது. இடையிலோ ஓங்கி வளர்ந்த பனைமரங்கள் நிறைந்த பெருங்காடு; முன்வரிசையில் அணி வகுத்து முன்னேறும் அடல்மறவர், பனை நுங்கின் இனிமையைச் சுவைத்து மகிழ்கின்றனர்; மகிழ்ந்துசெல்கின்றனர். படை நடுவில் பாங்குடன் செல்லும் பைந்தமிழ் மறவர், பனம் பழத்தின் நறுஞ்சுவையை நாவார மாந்திச் செல்கின்றனர். பின்வரிசையில் பீடுடன் வரும் பெருவீரரோ, பனங்கிழங்கினைச் சுட்டுத் தின்று பகைவரை வெட்டி வீழ்த்த விரைகின்றனர். இங்ஙனம் தொடர்ந்து செல்லும் அளவுக்கு அத்துணைப் பெரியதாம், நலங்கிள்ளியின் பெரும்படை!

''தலையோர், நுங்கின் தீஞ்சேறு மிசைய
இடையோர், பழத்தின் பைங்கனி மாந்தக்
கடையோர், விடுவாய்ப் பிசிரொடு சுடுகிழங்கு நுகர''

[புறம். 225]

நலங்கிள்ளியின் படை வையத்தை வலமாக வந்து, வேந்தர்களின் பீடழித்து, வெற்றிமேல் வெற்றியினைக் குவித்ததாகத் தெற்றெனக் காட்டுகிறது, புறநானூறு! தீரத்தை நமக்கு ஊட்டுகிறது அப் புகழ்நானூறு!

யானையோடு எதிர்த்து நின்று போராடும் ஆற்றல் சால் மறவராக விளங்கினர், அற்றைத் தமிழர். அதனை,

"வெளிற்றுப்பனந் துணியின் வீற்றுவீற்றுக் கிடப்பக்
களிற்றுக்கணம் பொருத கண்ணகன் பறந்தலை..."
[புறம், 35]

என்னும் அடிகள் மூலம் அறிந்துகொள்ளலாம். யானையின் பெரும் பிடரியின் மீது அமர்ந்து, ஒளி வீசும் வாளினைக் கையிற்கொண்டு, வன்மையுடன் போர் செய்யும் தன்மையினைப் பெற்றிருந்தனர் என்பதனைப்

"பெருங்கை யானை இரும்பிடர்த் தலையிருந்து
மருந்தில் கூற்றத்து அருந்தொழில் சாயாக்
கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி" [புறம். 3]

என்னும் அடிகள் தெளிவாகக் காட்டுகின்றன! பண்டைத் தமிழர் வீரத்தைப் பறைசாற்றுகின்றன! போர்க்களத்தில் விழுப்புண் படுவதைப் பெரிதும் விழைந்த வீர மறவர்களைப் பெற்ற தீர நாடல்லவா இத்திருநாடு! 'இப் பெரு நாட்டின் வீரம் திரும்பாதோ?' என்ற ஏக்கத்தை ஏற்படுத்தும் இலட்சிய ஏடல்லவா புறநானூறு?

புறநானூற்றுக் காலம்—பெற்றெடுத்துப் பேணி வளர்த்த அன்னை தன் மகன் வெற்றிவீரனாக விளங்க வேண்டும் என்பதையே விரும்பி வாழ்ந்த பொற்காலம்! தமிழர்களின் புகழ்க்காலம்? வெஞ்சமர்க் களத்திற்கு அஞ்சாது சென்று நெஞ்சுரத்துடன் வாளைச் சுழற்றிப் பகைவரின் களிறுகளை வெட்டி வீழ்த்தி. வீர மைந்தனாக வீடு திரும்புவதையே பெருமை எனக் கருதிய வீரத் தாய்மார் வாழ்ந்த காலம்; வீரம் வளர்ந்த காலம்!

"......ஒளிறு வாள் அருஞ்சமம் முருக்கிக்
களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே"
[புறம், 312]

என்பது பொன்முடியார் புறப்பாடல்; மறக்குடி மகளின் திறன் காட்டும் மணிப்பாடல்!!

ஆம்! பண்டைத் தமிழர் வீரத்தோடு விளங்கினர் என்றால், தமிழகத்தின் தாய்க் குலந்தான் அதற்குக் காரணம். திண்ணிய நெஞ்சத்தையும் திடமான மனத்தையும் பெற்றிருந்தனர் அக்கால வீரத் தாய் மார். எதிர்த்து வந்த களிற்றினை எட்டி உதைத்து, போர்க்களத்தில் புண்பட்டு இறந்தான் தன் புதல்வன் எனக் கேட்டு, "ஈன்ற ஞான்றினும் பெருமகிழ்வு கொண்டு, இன்பக் கண்ணீரை வடித்தாளாம், ஒரு தாய்! மார்பிலே காயம் பட்டு மடிந்து கிடக்கும் தன் மகனைக் கண்டு 'பெற்ற பொழுதினும் பெரிதே' மகிழ்ந்தனளாம், பிரிதொரு தாய்! தந்தையை யும் கணவனையும் இழந்த பிறகும் போர்முரசு ஒலிக்கக் கேட்டுத் தன் ஒரே செல்வனையும் சீவிச் சிங்காரித்துச் 'செருமுனை நோக்கிச் செல்க' என விடுத்தாளாம் மற்றொரு மறக்குல மங்கை!

இத்தகைய வீர மங்கையரைப் பெற்றிருந்த காரணத் தால்தான், பண்டைத் தமிழரின் வீரம் பழுதடையாத நிலையில் பாதுகாக்கப் பெற்றது. பழந்தமிழரின் அவ் வீரவாழ்வை விளக்கிக் காட்டும் வீர இலக்கியமே புறநானூறு. மறங்காட்டி எழுகின்ற மாத்தமிழர் முன்னால் புறங்காட்டிப் பகையோடும்--பதுங்குதற்கு இடந்தேடும்; அத்திறன் காட்டும் தீர இலக்கியமே புறநானூறு எனில், முற்றிலும் உண்மை; வெறும் புகழ்ச்சியில்லை! வெல்க புறநானூற்று வீரம்!!

# 4

## கலித்தொகைக் காட்சிகள்

சங்க காலம், தமிழகத்தின் பொற்காலம். ஆயிரம் ஆயிரமாய் இலக்கியப் பூக்கள் மலர்ந்து மணம்பரப்பிய நற்காலம். செம்மாந்த புலவர்தம் சீரார்ந்த கவிப்புலமை செழித்த காலம்; செந்தமிழ் கொழித்த காலம்.

அக்காலத்தில்தான் பாட்டும் தொகையும் பிறந்தன. அவற்றால்தான் பண்டைத் தமிழர்தம் காதலும் வீரமும் தெரிந்தன. பழந்தமிழர் வாழ்வைப் படம் பிடித்துக் காட்டும் கண்ணாடிகள்தாம், அவ்விலக்கியக் கருவூலங்கள் என்னும் பேருண்மையும் அப்போதுதான் நமக்குப் புரிந்தது.

படம் பிடித்துக் காட்டுவதோடு அவற்றின் பணி முடிந்துவிடவில்லை. படிப்போர்தம் உள்ளத்தைப் பண்படுத்தும் பணியையும் அல்லவா, அவ்விலக்கியச் செல்வங்கள் செய்து கொண்டிருக்கின்றன!

அங்ஙனம், பண்டைத் தமிழர்தம் வாழ்வைப் படம் பிடித்துக் காட்டும் பாங்கும், படிப்போர்தம் நெஞ்சத்தைப் பண்படுத்தி நிமிர்த்தும் பான்மையும் ஒருங்கே பெற்ற இலக்கியந்தான், எட்டுத்தொகையுள் ஒன்றான 'கற்றறிந்தார் ஏத்தும்' கலித்தொகையாகும்.

இக் கலியினை ஞாலத்தோர்க்குக் கூட்டித் தொகுத்துக் கொடுத்தவராக, 'நாடும் பொருள்

---

* 18-2-1987 அன்று இரவு 8-30 மணிக்குச் சென்னை வானொலியில் ஒலிபரப்பானது.

சான்ற நல்லந்துவன் ஆசான்' கருதப்படுகிறார். பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் என்னும் ஐந்து பகுதிகளாக இது தொகுக்கப் பெற்றுள்ளது.

''போக்கெல்லாம் பாலை
புணர்தல் நறுங்குறிஞ்சி
ஆக்கமலி ஊடல்
மருதமே—நோக்கொன்றி
இல்லிருத்தல் முல்லை
இரங்கியபோக் கோர்நெய்தல்
புல்லும் கலிமுறைக் கோப்பு''

என்று, கலித்தொகையின் முறைவைப்பு பற்றிப் பறை சாற்றுகிறது ஒரு பழம்பாடல்.

சேரமான் பெருங்கடுங்கோ, குறிஞ்சிக் கபிலர், மருதன் இளநாகனார், சோழன் நல்லுருத்தினார், மதுரை ஆசிரியர் நல்லந்துவனார் ஆகிய ஐம்பெரும் புலவர்களின் அகத்தில் பூத்த ஐவகை மலர்களின் ஆரமே இக் கலித்தொகைக் கதம்பமாகும்.

''பெருங் கடுங்கோன் பாலை
கபிலர் குறிஞ்சி
மருதனிள நாகன்
மருதம்—அருஞ்சோழன்
நல்லுருத்தி ரன்முல்லை
நல்லந்துவன் நெய்தல்
கல்விவலார் கண்ட கலி''

எனும் பழம்வெண்பா, அதற்குச் சான்றாக நின்று சரிதம் படைப்பதைக் காணலாம்.

'நிறைகுடம் தழும்பாது' என்பர், ஆனால் 'கல்வி வலார் கண்ட இக் கலித்தொகையிலோ, 'ஐம்பெரும்'

நிறைகுடங்கள் அழகாகத் ததும்புகின்றன. இன்பத்தாலோ துன்பத்தாலோ எழுச்சி கொள்ளும்போது மனித மனம் துள்ளும்; அத்துள்ளலை வெளிப்படுத்தப் புலவர்களுக்குத் துணையாக இருந்து தோள்கொடுப்பது கலிப்பா வாகும். அத் துள்ளலோசைக் கலிப்பாக்கள், படிப்போர்தம் நெஞ்சத்தைக் களிப்பாக்கும் ஆற்றல் பெற்றவை; அத்தகு துள்ளலோசையால் உள்ளத்தை அள்ளும் இக் கலித்தொகையில் நம் கண்ணையும் கருத்தையும் கவரும் காட்சிகள் பலவாம். அகவாழ்வே சுகவாழ்வு எனக் கூடிக்களித்த காதலர்தம் கோலக் காட்சியொன்று, குறிஞ்சிக் கலியில் கபிலரால் படம் பிடித்துக் காட்டப்படுகிறது. நாமும் அதனைப் பார்ப் போமா?

அதோ, தினைப்புனம்! முற்றிய தினைக்கதிர்கள்! கொத்தித் தின்னப் பறந்துவரும் கிளிகளின் கூட்டம்! அக் கிளிகளை விரட்டித் தினைப்புனத்தைக் காவல் காக்கும் கன்னிப்பெண் ஒருத்தி! தப்பிய மானைத் தேடி வருவான்போல், அத் தினைப் புனத்திற்கு அடிக்கடி வந்து, அக் கன்னியினைக் கடைக்கண்ணால் கண்டு செல்லும் கட்டிளங் காளை யொருவன்!

காணுகின்றான் கண்களாலே, காட்டுகின்றான் முகக்குறியை! ஆயினும், வாய்திறந்து சொல்லிடவோ தயங்குகின்றான், மயங்குகின்றான். இந்நிலையில், அக் கன்னிமனம் அவனுக்காய்க் கரைகிறது. அவள் கண்ணி மையும் தூக்கமின்றிக் காதலுக்காய் அலைகிறது. கருத்தை வெளியிடவோ ஆசைமனம் துடிக்கிறது; பெண்ணுக்கு அணிகலனாம் நாணம் அதைத் தடுக்கிறது; ஏக்கத்தால் அன்னவளின் தோள்வளையும் நெகிழ்கிறது; நாட்களும் நகர்ந்திடவே நாணந்தான் தோற்கிறது.

அந்நாள்! அவன் வரும் நன்னாள்! அவளுக்குப் பொன்னாள்! தினைப்புனத்துப் பரண் அருகில் தினமாடும் ஓர் ஊஞ்சல். அவ்விடத்தில், காதல் தின வெடுக்க நின்ற கன்னி, அக் காளைவரக் காணுகின்றாள். 'அய்யா, இவ்வூஞ்சலைச் சிறிது ஊக்கி விடலாமா?' என்று நாணந்தனை விடுத்து, அந்நங்கையவள் கேட்கின்றாள். அதைக் கேட்ட காளையவன், 'நல்லது' என்று உடன் பட்டு, ஊஞ்சலையும் ஊக்குகின்றான். அவ்வேளை, பொய்யான மயக்கத்தை வரவழைத்து, ஊஞ்சலைப் பற்றியிருந்த கைநெகிழ்ந்து வீழ்வதுபோல், அவன் மார்பில் வீழ்கின்றாள், அக்கன்னி! அவனோ, அதனை உண்மை மயக்கமெனெ நம்பி, அவளைத் தூக்கி, ஊஞ்சலிலிருந்து கீழே வீழ்ந்துவிடாமல் தன் மார்புறக் கிடத்துகின்றான். அம்மங்கையோ, ஒன்றும் அறியாத வள்போல், மயக்கம்அடைந்தவள்போல்—அவன் மார்பில் கிடக்கின்றாள். ஏன் அவ்வாறு கிடக்கின்றாளாம் தெரியுமா? விழித்து எழுவாளாயின், 'பெண்ணே, போய்வா!' என்று கூறி உடனே அனுப்பிவிடுவானாம். அத்தகைய பண்புமிக்க தலைவனாம் அவன்! அதற்கு விருப்பமில்லாததால், அவன் அணைப்பிலேயே இருக் கிறாளாம். மயக்கமுற்றவள்போல் நடித்து, மனத்திற்குள் மகிழ்கிறாளாம்.

''இனக்கிளி யாம்கடிந்து
ஓம்பும் புனத்துஅயல்
ஊசல் ஊர்ந்து ஆட,
ஒருஞான்று வந்தானை,
'ஐய! சிறிது என்னை
ஊக்கி' எனக்கூறத்
'தையால்! நன்று' என்று
அவன்ஊக்க, கைநெகிழ்பு

பொய்யாக வீழ்ந்தேன்
அவன்மார்பில், வாயாச்செத்து
ஒய்யென ஆங்கே எடுத்தனன்;
கொண்டான் மேல்
மெய்யறியா தேன்போல்
கிடந்தேன்மன்; ஆயிடை
மெய்யறிந்து ஏற்று எழுவேன்
ஆயின், மற்று ஒய்யென,
'ஒண்குழாய்! செல்க!' எனக்
கூறி விடும் பண்பின்
அங்கண் உடையன் அவன்'' [கலி. 37]

நம் கண்ணுக்கு விருந்தாகும் இத்தகைய காதல் காட்சிகளுக்குக் கலித்தொகையில் பஞ்சமில்லை.

குறிஞ்சிக் கலியில் கபிலர் காட்டும் மற்றொரு காட்சி விருந்தையும் இப்போது நம் மனக்கண்ணால் கண்டு மகிழலாமா?

அதோ! தெருக்கோடியில் ஒரு சிறு வீடு! அம்மாவும் மகளும் மட்டுமே உள்ளனர். அவ்வேளை, 'அம்மா ஒரே தாகம்! கொஞ்சம் தண்ணீர்' என்னும் குரல், வீட்டு வாயிலிலிருந்து கேட்கிறது. உள்ளே ஏதோ வேலையாய் இருந்த தாய், 'யாரோ தாகத்திற்குத் தண்ணீர் கேட்கிறார்கள். கொண்டுபோய்க்கொடு' என்று மகளிடம் கூறுகிறாள். தாயின் கட்டளைக்கிணங்கத் தண்ணீர்க் குவளையுடன் வாயிலுக்கு வருகின்றாள், அவ்வனிதை. வீட்டு வாயிலில் ஓர் இளங்காளை, அரும்புமீசையுடன் குறும்புப் பார்வையுடன் நின்று கொண்டிருக்கிறான்.

தண்ணீர்க் குவளையை அவனிடம் கொடுக்கிறாள். அத் தண்ணீர்க் குவளையை வாங்குவதுபோல், அவள்

தளிர்க்கரத்தைப் பற்றுகின்றான், நெடுநாளைய தாகத்துடன்; அவள்மேல் கொண்ட மோகத்துடன்! இதை எதிர்ப்பார்க்கவில்லை, அந்த ஏந்திழை. உடன், அதிர்ச்சி அடைந்தவளாய், ‘அம்மா’ என்று அலறுகிறாள் அவள். இதை அவன் எதிர்பார்க்கவில்லை. அலறிய ஆரணங்கு, அப்போது தான் அவனை யார் என்று நன்கு அடையாளங் காணுகின்றாள். சின்னஞ்சிறு வயதில் அவள் கட்டிய மணல் வீட்டைச் சிதைத்து விளையாடியவன் அவன். இப்போது இளங்காளையாக அவள் கண்முன்னால் நின்று கொண்டிருக்கிறான். ‘அய்யோ! அவசரப்பட்டு அலறிவிட்டேன்; அம்மா வந்தால் அவனுக்கு ஏதேனும் ஆபத்து விளையுமே?’ என்று எண்ணுகின்றாள். அதற்குள், ‘என்ன? என்ன?’ என்று கேட்டுக்கொண்டே அம்மாவும் வீட்டிற்குள்ளிருந்து வாயிலுக்கு வந்து விடுகிறாள். என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்து நிற்கிறாள்; ‘என் கையைப் பிடித்து இழுத்தான்’ என்று சொல்வதற்கும் அவள் மனம் இடந்தரவில்லை. என்ன சொல்கிறாளாம் தெரியுமா? ‘அம்மா! தண்ணீர் வேகமாகக் குடித்ததால் விக்கினான்’ என்று மனமார ஒரு பொய்யை வாயாரக் கூறுகிறாள். அந்நேரத்தில் அவளுக்கும் அவனுக்கும் அப் பொய், நன்மை பயப்பதாயிற்றே! அவள் சொல்லி முடிப்பதற்குள், நிலைமையை உணர்ந்த அக்குறும்புக்கார இளைஞனும், ‘விக்கல்’ வந்ததுபோல் நடிக்கிறான். உடனே, அந்தத் தாய், ‘என்னப்பா அவசரம்? நிதானமாக நீர் அருந்தக் கூடாதா?’ என்று அறிவுரை கூறிக் கொண்டே, அக் காளையின் முதுகிலே தடவிக் கொடுக்கலானாள். அந்நேரம், கடைக்கண்ணால் அக்கன்னியைக் கொல்வான்போல் நோக்கிப் புன்முறுவல் பூக்கின்றானாம், அக் கட்டிளங்காளை!

"சுடர்த் தொடீஇ! கேளாய்!.........
அன்னையும் யானும்
இருந்தோமா, இல்லீரே!
உண்ணுநீர் வேட்டேன்'
என வந்தாற்கு, அன்னை,
'அடற்பொற் சிரகத்தால்
வாக்கி, சுடரிழாய்!
உண்ணுநீர் ஊட்டிவா'
என்றாள்; என, யானும்
தன்னை அறியாது
சென்றேன்; மற்று என்னை
வளை முன்கை பற்றி
நலிய, தெருமந்திட்டு
'அன்னாய், இவன் ஒருவன்
செய்ததுகாண்' என்றேனா,
அன்னை அலறிப்
படர்தர, தன்னையான்,
'உண்ணுநீர் விக்கினான்'
என்றேனா, அன்னையும்
தன்னைப் புறம்புஅழித்து
நீவ, மற்று என்னைக்
கடைக்கணால் கொல்வான்போல்
நோக்கி, நகைக்கூட்டம்
செய்தான், அக் கள்வன் மகன்!" [கலி. 51]

ஆம்! அக் கடைக்கண் பார்வையாலே, ஆயிரம்முறை அவளுக்கு நன்றி கூறிக்கொள்ளுகின்றான், அவன்!

அடுத்து,

சோழன் நல்லுருத்திரனார் பாடிய முல்லைக்கலியில் காதலும் வீரமும் கைகோர்த்து விளையாடும் ஒரு கண்கொள்ளாக் காட்சி. அதனைக் காண்போமா?

ஆடவரும் பெண்டிருமாக மக்கள் கூட்டம் அலை மோதிக்கொண்டிருக்கிறது. இன்னும் சிறிது நேரத்தில், ஏறுதழுவும் வீரவிளையாட்டுத் தொடங்கிவிடும். அதைக் காணத்தான், அம் மாபெரும் மக்கள் கூட்டம் ஆவலோடு காத்திருக்கிறது. கொம்பு சீவிவிடப்பட்ட கொழுத்த காளைளும், கொட்டம் அடக்கவரும் இளங் காளையரைக் குத்திக் கிழிக்கக் காத்திருக்கின்றன.

இஃது ஏறுதழுவும் வீரவிளையாட்டு மட்டுமா; அது தான் இல்லை. காதல் கொண்ட கன்னியரைத் தழுவும் இளங்காளையரின் காதல் விளையாட்டுமாகும்.

முல்லை நிலத்துப் பறையின் முழக்கம் விண்ணை முட்டுகிறது. பறையொலி கேட்ட காளையதுவோ பரபரக்கின்றது. சீறிச் சினந்து பாய்கிறது.

''எழுந்தது துகள்;
ஏற்றனர் மார்பு;
கவிழ்ந்தன மருப்பு;
கலங்கினர் பலர்!''

எனும் படிக்கு, ஏறுதழுவும் வீர விளையாட்டு அதோ நடக்கிறது. 'கொல்லேறு தழுவும் வீர இளைஞனுக்கே, என் மகளைக் கொடுப்பேன்' எனக் கூறும் தந்தையரின் குரல் தனியாகக் கேட்கிறது.

சீறிவரும் காளையதன் சீற்றத்தை அடக்கிடத் தாவிப் பாய்கிறான், ஒரு தடந்தோள் வீரன், அதனைக் கண்ட காதலியோ. தவியாய்த் தவிக்கிறாள். மங்கையின் மார்பைத் தழுவும் இன்பத்தைப்போல் எண்ணி, அக் காளையின் கொம்புகளைத் தழுவிக்கொள்கிறான், அவ் வீரமகன். அவனைத் தழுவி மகிழுகிறாள், வெற்றி மகள்! காளையின் கொட்டம் அடக்கி, வெற்றி வீரனாக

வந்து, காதலியின் கரம் பிடிக்கிறான். பண்டைத்தமிழர் தம் வீரக்காதல், ஈண்டு வெளிப்பட்டுத் தோன்றுவதைக் கண்டு பெருமிதம் கொள்ளுகின்றோம். காதலையும் வீரத்தையும் இரு கண்கள் எனப் போற்றிக் காத்த பழந்தமிழர் பெருமையை எண்ணி எண்ணி வியக்கின்றோம்.

காதல் இன்பக்காட்சிகளை மட்டுமே கண்டு விட்டால் போதுமா? பாலை நிலத்துக் கடுமையையும் கொடுமையையும் பார்க்க வேண்டாமா? பாலைபாடிய பெருங்கடுங்கோ அதோ நமக்கு வழிகாட்டுகிறார்; வாருங்கள் போகலாம்.

அதுவோ கோடைகாலம். மருந்துக்குக்கூட மழையில்லை. அதனால் வறண்டு காணப்படும் பாலைநிலம். நீர் இல்லா நீர் நிலை. தாகம் ஏற்படின் தண்ணீர்க்கு எங்கே போவது? வழக்கம்போல் தண்ணீர்த் தட்டுப்பாட்டின் தனியாட்சி நடக்கிறது. வழிச்செல்வோர்க்கோ உள்நாக்கு வறளுகிறது. தண்ணீரோ கிடைக்கவில்லை; தாகமோ மிஞ்சுகிறது; தடுமாற்றமே எஞ்சுகிறது. வழி நடந்த துயரம் ஒருபுறம்; தாகம் தீர்க்க வழியில்லையே என்ற தவிப்பு மறுபுறம். துக்கத்தின் தூண்டுதலால் கண்ணீர்த்துளிகள் ஊற்றெடுக்கின்றன; கன்னத்தில் வழிந்து, நாவை நனைக்கின்றன. தண்ணீர் தீர்க்க வேண்டிய தாகத்தை, அவர்தம் கண்ணீர் தீர்க்கிறது. அத்தகைய கடுமை நிறைந்ததாம் பாலை நிலத்துப் பெருங்காடு.

பாலை பாடிய பெருங்கடுங்கோ பாடுகிறார், கேளுங்கள்:

"உள்நீர் வறப்பப
புலர்வாடு நாவிற்கு
தண்ணீர் பெறாஅத்
தடுமாற்று அருந்துயரம்
கண்ணீர் நனைக்கும்
கடுமைய, காடு......"

காட்டின் கடுமையை, எப்படி நம் கண்முன் காட்டுகிறார், பார்த்தீர்களா? அத்துடன் நிறுத்தினாரில்லை. மேலும் தொடர்கிறார்!

உச்சி வெயில் கொளுத்துகிறது. ஒதுங்குவதற்கோ நிழல் மரங்களே இல்லை. நிற்பவை எல்லாம் இலைதழை ஏதுமில்லாப் பட்டுப்போன மொட்டை மரங்கள், இவ் வெயிலின் கொடுமையிலிருந்து, பெண்புறாவைக் காக்க நினைக்கிறது, ஓர் ஆண்புறா. தனது சிறகை விரிக்கிறது. அச்சிறகின் நிழலில் பெண்புறாவை நிறுத்தி இளைப்பாறச் செய்கிறது.

ஆண்மான்கள் என்ன செய்கின்றனவாம் தெரியுமா? வெட்ட வெளியில் வெயிலில் நின்று கொண்டிருக்கின்றன. அவற்றின் நிழலிலே பெண்மான்களை இளைப்பாறச் செய்கின்றனவாம்.

"அன்புகொள் மடப்பெடை
அசைஇய வருத்தத்தை
மென்சிறகரால் ஆற்றும் புறவும்"

என்றும்,

"இன்நிழல் இன்மையான்
வருந்திய மடப்பிணைக்குத்

தன்நிழலைக் கொடுத்து
அளிக்கும் கலை."

என்றும், அக்காட்சிகளை அழகாகப் படம் பிடித்துக் காட்டுகிறார், பெருங்கடுங்கோ.

அடுத்து,

கலித்தொகையில் இடம்பெறும் உவமைகள் பல நம் சிந்தனைக்கு விருந்தளிக்கும் சிறந்த கருத்துருக் காட்சிகளாக மிளிர்கின்றன. காட்டுக்கு ஒன்றைக் காண்போமா?

நிகழ்ச்சி ஒன்றுதான். அதற்குப் புலவர் காட்டும் உவமைகளோ மூன்று. காதலித்தான்; அவளும் காதலித்தாள்; கட்டுண்டார்கள். பெற்றோரோ கடுகடுத்தார்கள். உற்றாரோ முணுமுணுத்தார்கள். நிலைமை முற்றவே, இருவரும் 'உடன்போக்கு' நிகழ்த்தினர். இக்கால நடையில் சொல்வதானால், ஊரைவிட்டே ஓடிப் போனார்கள். பதைபதைத்த பெற்றோரோ வாடிப்போனார்கள். அப்பெண்ணை வளர்த்த செவிலியரோ, தேடிப்போனார்கள். வழியில் எதிர்வரும் அறவோர் சிலரைச் சந்திக்கிறாள், செவிலித்தாய் ஒருத்தி. செய்தியைக் கூறுகிறாள். அதனைக் கேட்டு, உலகஇயலை நன்கு உணர்ந்த அறவோர், அவளுக்கு அறிவுரைகூறி அனுப்பி வைக்கின்றனர். என்ன அறிவுரை?

"பலஉறு நறுஞ்சாந்தம்
படுப்பவர்க்கு அல்லதை,
மலையுளே பிறப்பினும்,
மலைக்கு அவைதாம் என்செய்யும்?

சீர்கெழு வெண்முத்தம்
அணிபவர்க்கு அல்லதை,
நீருளே பிறப்பினும்,
நீர்க்கு அவைதாம் என்செய்யும்?

ஏழ்புணர் இன்இசை
முரல்பவர்க்கு அல்லதை,
யாழுளே பிறப்பினும்,
யாழ்க்கு அவைதாம் என்செய்யும்
சூழுங்கால்,
நும்மகள் நுமக்கும் ஆங்கு அனையளே!''

என்று கூறி, நொந்து போயிருந்த அச் செவிலித்தாயின் சிந்தையைத் தெளிவிக்கின்றனர். தெளிவிக்கும்படியாக அப்படி என்னதான் கூறினார்கள்?

சந்தனமரம் இருக்கிறதே, அது மலையிலேதான் வளர்கிறது. அச் சந்தன மணத்தால் மலைக்கு ஏதேனும் பயன் உண்டா? இல்லை. அதனை அரைத்துப் பூசுபவர்க்குத்தான் பயன் உண்டு. சந்தனத்தின் நறுமணத்தை நானேதான் வைத்துக்கொள்வேன் என்று மலைதான் கூறமுடியுமா? கூறினாலும், அதை நாம்தான் ஏற்றுக்கொள்வோமா? அரைத்துப் பூசவேண்டிய இடத்திற்குச் சந்தனம் சென்று சேருவது தான் உலக இயற்கை. நும்மகள் நிலைமையும் அது தான்.

முத்து இருக்கிறதே. அது கடலில்தான் கிடைக் கிறது. அதனால் கடலுக்கு ஏதேனும் பயன் உண்டா? இல்லையன்றோ? அதன் பயன், ஆரமாகத் தொடுத்து அணிபவர்களுக்கே அல்லாமல் கடலுக்கு உண்டோ? கடலிலேயே இருந்து விட்டால் அம் முத்துக்குத்தான்

என்ன பெருமை? நான் பெற்ற முத்தை, நானேதான் வைத்துக்கொள்வேன் என்று கடல் உரிமை கொண்டாட முடியுமா? ஆரமாக்கி அணியப்படவேண்டிய இடத்திற்கு முத்து சென்று சேருவதுதானே உலக நியதி? நும் மகள் நிலைமையும் அதுதான்.

யாழ் இருக்கிறதே. அதிலிருந்துதான் இனிமையான இசை பிறக்கிறது. அவ்விசையால் யாழுக்கு ஏதேனும் பயன் உண்டா? இல்லவே இல்லை. இசையைக் கேட்டு மகிழ்பவர்களுக்கே அவ்விசை இன்பம் செய்யும். 'என்னிடம்தானே இசை பிறந்தது. அது எனக்கு மட்டுமே சொந்தம்' என்று யாழ் உரிமை கொண்டாட முடியாது—கூடாது! யாழிலே பிறக்கும் இசை, சென்று சேரவேண்டிய இடத்திற்குச் செல்வதுதான் உலக இயல்பு. நும் மகள் நிலைமையும் அதுதான்.

இங்ஙனம், சந்தனம், முத்து, யாழ் என மூன்று உவமைகளின்மூலம் இவ்வுலக இயல்பு அவ்வறவோரால் தெளிவாக உரைக்கப்படுகிறது; அதன்மூலம் உயர்ந்த தத்துவம் உரியமுறையில் உலகுக்கும் உணர்த்தப்படு கிறது.

இத்தகு கலித்தொகையின் 'மந்திர சக்தி'யில் மயங்கிய ஒரு புலவன் பாடுகிறான்.

"திருத்தகு மாமுனி சிந்தா மணி; கம்பன்
விருத்தக் கவிவளமும் வேண்டேம்—திருக்குறளோ
கொங்குவேள் மாக்கதையோ கொள்ளேம்; நனிஆர்வேம்
பொங்குகலி இன்பப் பொருள்."

வேறு எவையும் வேண்டேம்; பொங்குகலி இன்பப் பொருளே போதும் என்று பாராட்டிப் போற்றும்

அளவுக்குக் கலித்தொகை தனித்துவம் பெற்றுத் திகழ்கிறது.

> 'ஒன்றன் கூறாடை உடுப்பவரே ஆயினும்
> ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை.'

என்று, உளமொன்றிய காதல் வாழ்வுக்கு அடித்தளம் அமைக்கவே, இக் கலித்தொகைக் காட்சிகள் துணை செய்கின்றன. கலிதரும் கவிஇன்பத்தில் திளைப்பதோடு, அது தரும் கருத்தின்பத்திலும் நம் மனத்தைச் செலுத்தி உயர்வோமாக!

# 5

## வள்ளுவர் வகுத்த நட்பு நெறி*

### [1]

வாழ்க்கைக்கு விளக்கம் தந்தவர் வள்ளுவர்.

அனைத்து நிலை மக்களுக்காகவும் தனித்த நிலை நின்று, குரல் கொடுக்கும் ஒப்பற்ற நூல் குறள் எனில் மிகையாகாது. அஃது ஓர் அறிவுக் களஞ்சியம்; அறக் கருவூலம்; அமுதக் கலசம்!

குமுகாயம் என்றாலே கூடி வாழ்வதுதான். 'கூடி வாழ்ந்தால் கோடி நன்மை' என்றுதானே சான்றோரும் கூறிச் சென்றனர். கூடி வாழ்வதற்குரிய அடிப்படைப் பண்பு யாது? அதுதான் அன்பு. 'அன்பின் வழியது உயிர் நிலை'யன்றோ? அந்த அன்பினை அடித்தளமாகக் கொண்டுதான், 'சேர்ந்து வாழும் பண்பு' உருவாகின்றது.

அன்பு, பிறரிடம் விருப்பங்கொள்ளும் 'ஆர்வத்தைத்' தரும். அந்த ஆர்வம், நட்பு என்னும் அளவற்ற சிறப்பைத் தரும். ஆம்! அன்புதான் நட்பிற்கு அடிப்படை என்கிறார் வள்ளுவர்.

---

* 13-12-74; 14-12-88; 15-12-1974 ஆகிய நாட்களில் காலை 6.05 மணிக்குச் சென்னை வானொலியில் ஒலிப்பரப் பானவை.

நட்பு என்னும் அந் நற்பண்பினை நாடிப் பெற வேண்டியது நன்மக்கள் கடமையாகும். நட்புணர்வு இல்லாமல் சமுதாய நல்லுணர்வு இல்லை. ஒருவருக்கு ஒருவர் இணங்கி வாழவேண்டிய நிலையில்தான் எந்தச் சமுதாய அமைப்பும் இருப்பதை நாம் கண்கூடாகக் காணுகின்றோம்.

'இணங்கி வாழவேண்டும்' என்பதற்காக, எல்லோருடனும் இணங்கி வாழ்ந்து விடமுடியுமா? அப்படி வாழ்வது முறையாகுமா?

நட்புக்கொள்ளும்போது சிந்தித்துச் செயல்பட வேண்டும்—சீர்தூக்கிப் பார்க்கவேண்டும் என்றுதான் சீரிய சிந்தனையாளர்கள் செப்பியுள்ளனர். 'இணக்கம் அறிந்து இணங்கு' என்றுதானே ஆத்திசூடி ஒளவையாரும் ஆணித்தரமாகக் கூறுகின்றார்.

ஆகவேதான், ஆராய்ந்து அறிந்து நட்புக்கொள்ள வேண்டும் என்பர். ஒருவனை 'ஒருயிர் ஈருடல் நண்பனாக ஏற்றுக் கொண்டுவிட்ட பிறகு, ஏதோ பிணக்கினால் பிரிய நேரிட்டால், அப் பிரிவைத் தாங்கிக் கொள்ளவே முடியாது. அதனால் ஈருடலும் 'ஒருயிர்' ஆவதற்கு முன்பே, 'தேவையா இவன் நட்பு? எனத் தீர ஆலோசித்துப் பார்க்க வேண்டும்.

கண்ணை மூடிக்கொண்டு நட்புச் செய்வது என்பதெல்லாம், நம்மை நாமே ஏமாற்றி கொள்வதாகும், இனிக்க இனிக்கப் பேசும் எல்லோரையும் நண்பர்களாக ஏற்றுக்கொள்வோமானால், அதைவிட ஏமாளித்தனம் வேறு இல்லை என்றே சொல்லலாம். 'நல்இணக்கம் அல்லது அல்லற் படுத்தும்' என்பதுதானே 'கொன்றை வேந்தன்' கற்றுக்கொடுக்கும் பாடம்,

நம்மால் வளர்க்கப்பட்ட நாய் இருக்கிறதே, அது வேலால் எறிந்து தாக்கினாலும், வாலைக் குழைத்துக் கொண்டு நன்றி மறவாமல் நம்மையே சுற்றும். ஆனால், யானை இருக்கிறதே, அது அப்படியன்று; தனக்கு உணவூட்டி அன்பு காட்டி வளர்த்த பாகனையே கொல்லும். துன்பம் வந்த போதும் நம்மைவிட்டுப் பிரியாத தூய நண்பர்களும் உண்டு; நாம் செய்த உதவி களைப் பெற்றுக்கொண்டு, நமக்கே உலை வைக்கத் துடிக்கும் நண்பர்களும் உண்டு. அவர்கள் 'யானை அனையவர்' என எச்சரிக்கிறது நாலடியார். ஆகவே, நண்பர்களைத் தேர்ந்தெடுக்கும்போது நாம் விழிப் பாகவே இருக்கவேண்டும்.

புறத்தோற்றத்தைக் கண்டே ஒருவனை நண்பனாகக் கொள்ளமுடியாது—கூடாது! அகத்தோற்றத்தைக் கொண்டே அவனை அளந்து பார்த்திடவேண்டும். புறத்தோற்றம் கவர்ச்சியாக இருக்கலாம்—ஆனால், கண்ணியமாக இருக்கவேண்டுமே? அதனை ஆய்ந்து அறியவேண்டியது நம் கடமையன்றோ? அகத்தோற்றம் நம் கண்ணுக்குத் தெரியாமல் இருக்கலாம்—ஆனால், கருத்துக்குத் தெரியாமல் இருக்கலாமா?

அகத்தால் நல்ல குணம் உடையோரும் உண்டு; கெட்ட குணம் உடையோரும் உண்டு. ஆகவே, நட்புக் கொள்ளும்போது, முதலில் ஆராய்ந்து அறிய வேண்டியது ஒருவனுடைய 'குணமே' என்கிறார் வள்ளுவர்.

பணம் இருக்கிறதா என்று பார்த்து நட்புக் கொள்வோர் நம்மிடையே பலர் உண்டு. 'பணம் பந்தியிலே குணம் குப்பையிலே' என்பதில் நம்பிக்கை

கொண்டு பாதை மாறிச் செல்பவர்கள் அவர்கள். ஆனால், குறளமுதத்தின் முன்னாலோ இப் பழமொழி தான் வெறும் குப்பை! பணம் இருக்கிறதா என்று பார்ப்பதைவிடக் குணம் இருக்கிறதா என்று பார்த்து நட்புக்கொள்வதே சாலச் சிறந்ததாகும்.,

குணத்திற்கு அடுத்து, நாம் ஆய்ந்து பார்க்க வேண்டியது, அவன் 'குடிப்பிறப்பு' என்கிறார் வள்ளுவர். சாதியால், குலத்தால் உயர்ந்த குடியில் பிறத்தல் என்பதல்ல வள்ளுவர் கருத்து. அன்பால் பண்பால் நல் ஒழுக்கத்தால் உயர்ந்து விளங்கும் குடியைத்தான் வள்ளுவர் கூறுவதாக நாம் கொள்ளவேண்டும். இல்லையேல், 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' என்று கூறிய வள்ளுவப் பெருந்தகைக்கு மாசு ஏற்படுத்தியவர் கள் ஆவோம்.

குடிப்பிறப்பிற்கு அடுத்து, நாம் அறிந்து கொள்ள வேண்டியது, அவன் 'குற்றம்' என்கிறார் வள்ளுவர். 'நெல்லுக்கு உமி உண்டு; நீர்க்கு நுரை உண்டு; புல் இதழ் பூவிற்கு உண்டு' என்பதுபோல் குற்றம் இல்லாதவர்கள் என்று இக் குவலயத்தில் நாம் யாரையும் கூறமுடியாது. பொறுத்துக் கொள்ளக்கூடிய குற்ற மாயின், அதன் பொருட்டு நட்பினை விடாமல் இருக்கலாமன்றோ? 'ஒருவர் பொறை இருவர் நட்பு' அன்றோ? குற்றம் பார்க்கின் சுற்றம் இல்லை' என்னும் அனுபவ மொழியும் நாம் அறிந்ததுதானே!

அத்துடன் சுற்றத்தாரின் இயல்பையும் ஆராய்ந்து அறிந்த பின்பே, ஒருவனோடு நாம் நட்புக்கொள்ள வேண்டும் என்கிறார் வள்ளுவர்.

ஒருவனோடு நட்புக்கொள்ளுவதற்கு முன்பே இந் நான்கு பண்புகளையும் ஆராய்ந்து அறிய வேண்டியது

அவசியம் என்பதனை வலியுறுத்தும் குறளமுதம் இதோ:—

‘குணனும் குடிமையும் குற்றமும் குன்றா
இனனும் அறிந்தியாக்க நட்பு.’’ (குறள் 763).

ஆம்! ஒருவனுடைய குணம், குடிப்பிறப்பு, குற்றம் குறைவற்ற சுற்றம் ஆகியவற்றை நன்கு ஆராய்ந்து அறிந்தே, அவனோடு நட்புக்கொள்ள வேண்டும் அத்தகைய நட்புதான் தலையாய நட்பாக அமைய முடியும்.

[2]

வள்ளுவர் வகுத்துக் காட்டும் வாழ்க்கை நெறியே, நாம் ஒவ்வொருவரும் கடைப்பிடிக்க வேண்டிய நன்னெறியாகும். குவலயம் போற்றும் அக் குறள்நெறி காட்டும் உண்மைகள், நம் வாழ்வைச் செம்மைப் படுத்த வல்லவையாம்!

நம் வாழ்வு சிறக்க வேண்டுமெனில் நல்ல நண்பர்கள் தேவை. நல்ல நண்பர்களை எங்ஙனம் பெறுதல் கூடும்? குறள் அதற்கு விடை கூறும்! நட்புக் கொள்ளுவதில் அவசரத்திற்கு இடமில்லை. நட்பு என்பது மந்திரத்தில் மாங்காய் காய்ப்பதல்ல! நன்கு ஆராய்ந்து பார்த்தே நட்புச் செய்யவேண்டும்.

நட்புக் கொள்ளுவதற்குக் கூடவா ஆராய்ச்சி...? என மலைக்கவேண்டாம். நண்பர்களுக்குள்ளேயே நல்லவர்களும் உண்டு; கெட்டவர்களும் உண்டு. இந்நிலையில், ஆராய்ச்சியின்றிக் கெட்டதை விலக்கி நல்லதை எப்படித் தேர்ந்தெடுக்க முடியும்?

நம் அன்றாட வாழ்க்கையில் காண்பதென்ன? ஆராய்ந்து அறியாமல் நட்புக் கொண்டுவிட்டு அவதிப்

படுகிறவர்கள் எத்தனைபேர்? 'இல்லத்திற்கு வரும்போது இனிமையாகப் பேசுகிறான்; பொதுவிடம் போனவுடன் புறங்கூறித் திரிகின்றான்' என்று, புரியாமல் நட்புக் கொண்டுவிட்டு புலம்புகிறவர்கள் எத்தனை பேர்?

அன்பொழுகப் பழகுவது— அடுத்துக் கெடுப்பது; கனிவாகப் பேசுவது—சாட்டிக் கொடுப்பது; இப்படிப் பட்ட இரட்டைமனப் பிறவிகளை நாம் அன்றாடம் சந்தித்துக் கொண்டுதானே இருக்கின்றோம். அதனாற்றான், நன்கு சிந்தித்து நட்புக் கொள்ள வேண்டும் என்கிறார் வள்ளுவர்.

இன்பத்தில் பங்குகொள்ளப் போட்டி போட்டுக் கொண்டு வருவர்; துன்பத்தில் நாம் துடித்திடும் போதோ காத தூரம் விலகியே செல்வர். அத்தகைய நச்சு இதயங்கொண்ட நயவஞ்சகரும் 'நண்பர்' என்ற போர்வையில் நம்மோடு உறவாட வரலாம். அந்நேரத் தில்தான் நாம் எச்சரிக்கையாக இருக்கவேண்டும்.

இராணுவத்தில் பணியாற்றி ஓய்வுபெற்ற தளபதி ஒருவருக்குப் பாராட்டு நடைபெற்றதாம், இங்கிலாந்தில். போர்க்கள வாழ்வுக்கும், மக்களுடன் கலந்து வாழும் இப்பொதய வாழ்வுக்கும் என்ன வேறுபாடு காணுகிறீர் கள் என்று கேட்டனராம் அவரிடம். அதற்கு அவர், "போர்க்கள வாழ்வில் நம்மவர் யார், பகைவர் யார் என்பதை எளிதில் கண்டுகொள்ள முடிந்தது, அவர்கள் அணிந்துள்ள சீருடையின் மூலம்! ஆனால், இப்பொது வாழ்வில் அது இயலவில்லை" என்று பதில் கூறினராம். ஆம்! யார் நண்பர், யார் பகைவர் என்பதனை அவரால் கண்டுகொள்ளவே முடியவில்லையாம். ஆம்! பகைவர் கூட நண்பர்போல் பழகிப் பின் நமக்கே கேடு சூழலாம்

அன்றோ? அதனாற்றான், ஆராய்ந்து அறிந்து நட்புக் கொள்ளவேண்டிய அவசியமே ஏற்படுகிறது.

எத்தகையோரின் நட்பை நாம் கைக்கொள்ள வேண்டும்? நற்குடிப்பிறந்தோர் நட்பு நமக்கு மிகவும் தேவை என்கிறார் வள்ளுவர். செல்வத்தால் சாதியால் உயர்ந்த குடியையன்று வள்ளுவர் குறிப்பிடுவது என்பதனை முன்னமே நாம் அறிவோம். சாதியாலோ செல்வத்தாலோ உயர்வு தாழ்வு கற்பிப்போமாயின், பேரரசனான கோப்பெருஞ் சோழனுக்கும், எளிய வாழ்வு நடாத்திய பெரும்புலவராம் பிசிராந்தையாருக்கும் இடையே ஏற்பட்ட நட்பினை ஏளனம் செய்தவர் ஆவோம். இராமாயணக் கதையில்கூட வேடர்கள் குலத்திலகமாம் குகனைத்தானே, 'யாதினும் இனிய நண்ப'னாக இராமன் ஏற்றுக்கொண்டான் என்று பெருமையாகக் கூறுகிறார்கள். ஏழைப் புலவர் எனினும், வேடர் குலத்தவர் எனினும், ஒழுக்கத்தால் உயர்ந்த குடியைச் சேர்ந்தவர்கள் அவர்கள் எனக் கொள்ளல் வேண்டும்.

நற்குடிப் பிறந்ததுடன், 'நாணிலம் சொல்லும் பழிக்கு நாணுவானை' நாம் எப்படியும் நண்பனாக ஏற்றுக்கொள்ள வேண்டும் என்கிறார் வள்ளுவர். நற்குடிப் 'பிறந்தமையால் பிழையேதும் செய்ய மாட்டார்; பழிக்கு அஞ்சும் பண்புடைமையால் நாம் சிறு பிழைசெய்யினும் அதனைப் பொறுத்துக் கொள்வார். ஆகவே அத்தகையோர் நட்பை 'விலை' கொடுத்தாயினும் கொள்ளவேண்டும், என்று விளக்கம் தருகிறார் பரிமேலழகர்.

கடலுள் மாய்ந்த இளம்பெரு வழுதி என்னும் பாண்டிய மன்னன், 'புகழ் என்றால் உயிரையே

கொடுப்பவர்கள்; பழி என்றாலோ உலகத்தையே விலையாகக் கொடுப்பினும் ஏற்றுக்கொள்ள மறுப்பவர்கள்... இருப்பதால்தான் இவ் வுலகம் இன்றளவும் நிலை பெற்றிருக்கிறது' என்று புறநானூற்றுப் பாடல் மூலம் நமக்குப் புகட்டும் பாடம் என்ன? பழிக்கு நாணுகின்றவர்கள். எதைக் கொடுத்தாலும், ஏன்? இந்த உலகத்தையே கொடுப்பதாக இருந்தாலும் பெற்றுக் கொள்ளமாட்டார்கள் என்பதுதானே.

அப்படியிருக்க, வள்ளுவர் படம் பிடித்துக் காட்டும் 'பழிக்கு நாணுகின்றவர்' பொருள் கொடுத்தால் பெற்றுக் கொள்வாரா என்ன? பழி பாவங்களுக்கு அஞ்சுகிறவர்களை விலைகொடுத்து வாங்கிவிட முடியுமா என்ன? இயலாது என்க. பின், 'கொடுத்தும் நட்புக் கொளல் வேண்டும்' என்று கூறுகிறாரே வள்ளுவர் எனில், அவர் கொடுக்கச் சொன்னது யாது என்பதனை எண்ணிப் பார்த்திட வேண்டும். அன்பை, அருங் குணத்தை, பழகுதற்கினிய பண்பை, பாசத்தை, பற்றை விலையாகக் கொடுக்கலாம் அன்றோ? அங்ஙனம் கொடுத்து, பழிக்கு அஞ்சும் பண்பாளர் நட்பைக் கொள்ளலாம் அன்றோ? அப்படித்தான் வள்ளுவர் கருதியிருப்பாரேயன்றி, 'கையூட்டாகப் பொருள் கொடுத்தாயினும் அவர் நட்பைப் பெற்றுக்கொள்க' என்று நிச்சயம் கூறியிருக்கமாட்டார். இக் கருத்தமைந்த குறளமுதம் இதோ : —

குடிப்பிறந்து தன்கண் பழிநாணு வானைக்
கொடுத்தும் கொளல்வேண்டும் நட்பு. (குறள் 794)

ஆம்! உயர்ந்த குடியில் பிறந்து, தன்னிடம் வரக் கூடிய உலகோர் சொல்லும் பழிக்கு நாணுகின்றவனை, அவன் விரும்பியதைக் கொடுத்தாவது நாம் நட்புக்

கொள்ளவேண்டும் என்கிறார் வள்ளுவர். அவர் காட்டிய நட்புவழி நின்று, நல்லோருடன் இணங்கி நானிலம் போற்ற வாழ்வோம்.

## [3]

நண்பர்களை ஆராய்ந்து அறிய வல்ல நல்ல கருத்துக்கள் திருக்குறளில் நிரம்ப உண்டு. நட்புச் செய்த பிறகு அதிலிருந்து விடுதலை இல்லை என்பதால்தான் ஆராய்ந்து அறிந்து நட்புச் செய்யவேண்டியுள்ளது. கண்ணைக் குத்தியது என்பதற்காகக் கையை வெட்டி எறிவார் உண்டோ? இவனை நண்பனாகக் கொண்டோமே என்று, நட்புச் செய்தபிறகு சிந்தித்துப் பயனில்லை. முன்பே நன்கு யோசித்திருக்க வேண்டும்.

நேரிலே பார்க்கும்போதோ, பாராட்டும் உள்ளம்; நிமிடநேரத்திற்குள் அதை மறந்து நமை வீழ்த்த வெட்டிடுவார் பள்ளம்; அத்தகையோர் நெஞ்சமெலாம் நிறைந்திருப்பதோ கள்ளம்; அதனை அறிந்து ஆராய்ந்து நட்புச் செய்கிறவர்கள் வாழ்க்கையே இன்பவெள்ளமாம்! வள்ளுவரும் அதனைத்தான் வலியுறுத்துகின்றார்.

குளம் வரண்டவுடன், இதுவரை வாழ்வுகொடுத்த குளமாயிற்றே என்று கொஞ்சமாவது எண்ணிப் பார்க்கிறதா, அதில் குடியிருந்த பறவைக் கூட்டம்? வளமுள்ள வேறு குளங்களைத்தானே நாடிச் செல்கிறது. அதுபோல், செல்வம் இருக்கும்போது உயிர் நண்பர் போல் பழகி அட்டைபோல் உறிஞ்சியவர்கள், செல்வம் சென்றவுடன் வேறு செல்வர்களை நாடிச் செல்லும் காட்சியும் நாம் அன்றாடம் காண்பதுதானே. அத்தகைய கயவரோடு நட்புக் கொள்ளக்கூடாது என்பது 'மூதுரை' மொழியும் முதுமொழியாகும்.

ஆராய்ந்து நட்புக் கொள்ளவேண்டும் என்பதன் அவசியம் இதன்மூலம் புரிகிறதன்றோ? நட்பு என்பதே அன்பு மணம் கமழ்வதாகும்; ஆரவாரத்தன்மை உடையதன்று; இன்பத்திலும் துன்பத்திலும் இருவர் உள்ளங்கள் ஒன்றுபட்டு இணைந்து வாழ்வதுதான் உண்மை நட்பாகும். 'நட்பு என்பதே வெறும் பொழுதுபோக்குக் காகத்தான்' என்போரின் வேதாந்தமெல்லாம் வீண் வாதம்தான்! 'குடிப்பதற்கும் குலாவுதற்கும்தான் நண்பர்கள்' என்பதெல்லாம் கோணல் புத்தி உடையவர்களின் குருட்டுக் கொள்கையாகும். சிற்றுண்டிச் சாலைகளுக்குச் சேர்ந்து செல்வதற்கோ, திரைப்பட—நாடகத் தினவுகளைத் தீர்த்துக் கொள்வதற்கோ உடன் வருவதுதான் உண்மை நட்புக்கு அடையாளம் என்பதல்ல! தவறான வழியில் நாம் செல்லும்போதும் தக்கமுறையில் எடுத்துக்கூறித் திருத்த வல்லவர்களையே நண்பர்களாகத் தேர்த்தெடுக்கவேண்டும். தன் தலை போனாலும் கவலையில்லை என்ற துணிவோடு, தவறு புரியும் மன்னனைத் தட்டிக்கேட்கும் நல் அமைச்சரைப் போலத் தவறான பாதையில் அடியெடுத்து வைக்கும் போது, நம்மைத் தடுத்து நிறுத்தி இடித்துக் கூறும் நெஞ்சுரங் கொண்ட நல்ல நண்பர்களே நமக்குத்தேவை என்கிறார் வள்ளுவர்.

இடித்துக்கூறி நன்மையை எடுத்துக் கூறுகிறவர்கள் இல்லையென்றால் நாடாளும் மன்னவனேகூடக் கெடுப்பார் யாருமின்றி தானாகக் கெட்டு அழிவான் என்னும் போது, நம் நிலையை நாம் எண்ணிப் பார்க்க வேண்டுமன்றோ? 'மிகுதிக்கண் மேற்சென்று இடித்தற் பொருட்டு' தான் நட்பு என்றாரே வள்ளுவர், அஃது எத்துணைப் பொருள்பொதிந்த பொன்மொழி என்பதனை எண்ணிப் பார்த்திடவேண்டும்.

கால்போன போக்கில் மனத்தையும் போகவிட்டுக் கடுந்துன்பத்திற்கு ஆளாகும் மனிதர்கள் எத்தனை பேர்? அத்தகையோர் போகிற போக்கிற்கு ஏற்றாற் போலவே நண்பர்கள் கிடைப்பின், அவர்களின் கடைசிப் புகலிடம் கண்ணீர்க் கோட்டம்தான்! அப் போக்கினை மாற்றியமைத்து, நல்வழி புகட்டும் நல்ல நண்பர்கள் கிடைப்பின், அவர்கள் வாழ்வு இன்பக் கொள்கலம் தான்!

அதனாற்றான், 'இடித்துக்கூறித் திருத்தவல்ல நல்ல நண்பர்களை ஆராய்ந்து கொள்ளவேண்டும்' என்கிறார் வள்ளுவர்.

'குதிரை கீழே தள்ளியதும் அல்லாமல் குழியும் பறித்ததாம்' என்பார்களே, அதுபோல நம்மோடு பழகிக்கொண்டு, நமக்கே குழி தோண்டும் குணம் உடையோரின் நட்பினை நாம் வெறுத்து ஒதுக்க வேண்டும். அத்தகைய குதிரைக்குணம் உடையோரின் நட்பைக் கொள்ளுவதைவிட, தள்ளுவதே மேல். நாம் தவறு செய்யும்போது அழஅழ இடித்தக் காட்டும் அமைச்சர் நிலைக்கு உயர்ந்தோரின் நட்பைத் தள்ளு வதைவிட, எப்படியாயினும் கொள்ளுவதே மேல். 'அழ அழச்சொல்வார், தன் மனிதர்' என்னும் பழமொழி நாம் அறிந்துதானே!

'ஒருநாட் பழகினும் பெரியோர் கேண்மை இருநிலம் பிளக்க வேர் வீழ்க்கும்மே' என்பது தென்காசிப் பாண்டியனின் வெற்றிவேற்கை தெரிவிக்கும் விழுமிய கருத்தாகும். அதனால் ஒருவன் அழும்படி இடித்துச் சொல்லும்போதும் பெரியோர்தம் நட்புக்கு எவ்வித பங்கமும் வந்துவிடாது.

ஆடம்பரம், ஆரவாரம், அலட்சியப்போக்கு ஆகியவைகளுக்கு ஆட்பட்டு, 'தலைகால்' புரியாமல் ஆட்டம் போடுவாரும் உண்டு அத்தகையோர் உலக வழக்கிற்கு மாறான, நன்மை அல்லாத செயல்களை விரும்பிச் செய்வர். அந் நிலையில் நல்லதைச் சொன்னால் அவர்கள் உள்ளம் வாடுமே என்று உண்மை நண்பர்கள் எண்ண மாட்டார்கள். தீமையின் பிடியிலிருந்து தம் நண்பனை விடுவிக்க வேண்டுமே என்னும் நல்ல நோக்கத்தோடு, அவர்கள் வருந்தும் படியாக இடித்துக் கூறித் திருத்த முனைவார்கள். உலக வழக்கினை அறியவல்ல உயர்ந்த நண்பர்கள் அவர்களாவர். ஆதலால், அத்தகையாரின் நட்பினை ஆராய்ந்து கொள்ள வேண்டியது மிக மிக அவசிய மாகும்.

"அழச் சொல்லி அல்லது இடித்து வழக்கறிய
வல்லார்நட்பு ஆய்ந்து கொளல்." (குறள் 795)

என்னும் குறளமுதே, அக்கருத்தை எடுத்து மொழியும் கொள்கை அமுதாம்! 'நன்மையல்லாத செயலைக் காணும்போது உள்ளம் நோகுமாறு இடித்துச் சொல்லி, உலக நடையை அறியும் வல்லமை உடையோரின் நட்பை ஆராய்ந்து கொள்ளவேண்டும்' என்பதே குறள் காட்டும் நட்பு நெறியாகும். அந் நெறியே, நம்மை வழிநடத்தும் நன்னெறியாகும்.

'வெல்க குறள் நெறி'

# 6

# இலக்கியச் சிலம்பில் *ஓர் இணையிலா வெண்பா,

மதுரை மாநகரத்தின் ஒரு பகுதியிலே, குருதி வெள்ளம் புடைசூழக் கொலையுண்டு கிடக்கிறான் ஒருவன். மாமன்னனின் ஏவலினால் கொலையுண்டு கிடக்கும் தன் மணாளனைக் காண, அழுது அரற்றிக் கொண்டு விரைந்து வருகிறாள் ஒருத்தி.

'தார்மலி மணிமார்பம் தரை மூழ்கிக் கிடக்கின்ற தன் துணைவன் நிலைகண்டு தாங்கொணாத் துயரத் தால் துடிக்கின்றாள் அத் தோகை மயிலாள்!

காலையிலே தன் கூந்தலிலே மாலை சூட்டி மகிழ்ந்து சென்ற மணாளன், மாலையிலே புழுதி படிந்த நிலை யிலே மடிந்துகிடக்கும் கோரக்காட்சியினைக் கண்டு, குமுறும் எரிமலையாகிறாள்—கொந்தளிக்கும் கடலா கிறாள்.

'முறை தவறிய மன்னவனைக் கண்டு; காரணங் கேட்பேன்' என்று கூறிக்கொண்டு அரசனின் அரண்மனை நோக்கி ஆவேசத்துடன் புறப்படுகிறாள்.

அரண்மனையில்...

---

* *15-9-1959* நக்கீரன்' என்னும் வாரஇதழில் வெளி வந்த பரிசுக் கட்டுரை (மாணவப் பருவத்தில் எழுதியது.)

தீக்கனாக் கண்ட கோப்பெருந்தேவி, 'அரிமான் ஏந்திய அமளிமிசை' வீற்றிருந்த பாண்டியன் நெடுஞ் செழியனிடம், அதனைக் கூறிக் கொண்டிருக்கிறாள்.

அந் நேரத்தில்...

அரண்மனை வாயிலில் வந்து நிற்கின்றாள் கணவனை இழந்த அக்காரிகை. அவள் தோற்றத்தைக் கண்டு வாயிற்காப்போனே நடுங்குகின்றான்.

அப்பொற்புடைய மங்கையின் உடம்பெங்கும் புழுதி படிந்திருக்கும் நிலை; முதுகுப்புறமும் முன்புறமும் விரிந்து பரந்து கிடக்கின்ற கருமையான கூந்தல்; அல்லலுற்று ஆற்றாது அழுகின்ற அவள் கண்களிலிருந்து பொங்கி வரும் கண்ணீர் வெள்ளம்; கணவனை அநீதியினால் இழந்துவிட்டோமே என்ற துயரத்தின் சாயல்; படுகின்ற துன்பத்தால் பழிக்குப்பழி வாங்கத் துடிக்கும் நெஞ்சத்தின் குமுறல்; கணவனைக் கள்வன் அல்லன் எனக்காட்ட அவள் கையிலிருக்கும் ஒற்றைச் சிலம்பு—இந்தத் தோற்றத்தோடு அரசன் முன்னே போய் நிற்கிறாள் அந்த ஆரணங்கு!

அவளைக் கண்ட மன்னன், 'நீர்வார் கண்ணை எம்முன் வந்தோய்! யாரையோ நீ?' எனக் கேட்கிறான்.

'தேரா மன்னா!' என்ற அர்ச்சனையோடு தொடங்கி, ஆணித்தரமாகத் தன் வாதத்தை எடுத்து வைக்கின்றாள் அந்தப் பாவை!

'பசுவின் துன்பத்திற்காகத் தன் மகனையும், புறாவின் துன்பத்திற்காகத் தன்னையும் ஈந்து நீதியை நிலைக்கச் செய்த அரசர்கள் ஆண்ட புகார் நகரமே எனது ஊர்' எனப் பெருமையாகப் புகலுகின்றாள்; அந்தப் பூவை.

பசுவின் துன்பம், பறவையின் துன்பம் தீர்க்கப்படுகிற நிலை பூம்புகாரில்: ஆனால் மாட மதுரையிலோ மனிதனே காரணமின்றிக் கொலைக்களப்படும் நிலை என்பதனை மறைமுகமாகச் சுட்டிக் காட்டிடும் அவள் வாதத்திறன் போற்றுதற்குரியதாகும்.

மேலும், 'ஏசாச் சிறப்பின் இசைவிளங்கு பெருங்குடியில், மாசாத்து வாணிகனின் மகனாய்ப் பிறந்தோனே, என் மணாளன்' என்கிறாள் அந்த மாதரசி.

'ஏசாச் சிறப்பு'டைய ஏந்தலைக் கூசாமல் கொலை செய்து விட்டாயே எனக் கூறாமல் கூறுகிறாளன்றோ?

'வாழ்தல் வேண்டி' மதுரை நகர்ப் புகுந்த எம்மை வாழவிடவில்லை மாமன்னன் என்பதனையும் குமுறும் நெஞ்சமுடன் கோடிட்டுக் காட்டுகின்றாள். வாழ்தல் வேண்டி வந்தவனைச் 'சாதல்' தீண்டிடக் கண்ட வேதனையின் விளிம்பில் நின்றுகொண்டன்றோ விடை பகர்கின்றாள், அவ் வீர பத்தினி!

'என்காற் சிலம்பினை இவண் விற்க வந்தமைக்கு, இத்துணை பெரிய தண்டனை ஏன்?' என்ற வினாக்கணையும் அவள் விடைக்குள் புதைந்திருப்பதைக் காணுகின்றோம். 'விற்க வந்ததோ எனது காற்சிலம்பை! அதற்கு விலை, கொலையா?' என, நியாயங் கேட்கும் நிலைகுலையா அவள் நெஞ்சங் கண்டு வியக்கின்றோம்.

"என்காற் சிலம்பு பகர்தல் வேண்டி, நின்பாற்
கொலைக்களப் பட்ட கோவலன் மனைவி;
கண்ணகி என்பது என் பெயரே!"

என்று, 'யார் நீ?' எனக் கேட்ட மன்னவனுக்குத் 'தான் யார்' என்பதனைச் சொல்லுகின்றாள். ஆம்!

மாபெரும் பத்தினி கண்ணகிதான், கற்பின் கனலியாக பாண்டியன் நெறிஞ்செழியன் முன் நின்றுகொண்டு நீதி கேட்கிறாள்.

'என் காற்சிலம்பு' எனக் கண்ணகி கூறிய பிறகும், 'எது உன் காற்சிலம்பு?' என வினாத் தொடுக்கவேண்டிய பாண்டிய மன்னன்,

'கள்வனைக் கோறல் கடுங்கோல் அன்று;'

என்கிறான். கோப்பெருந்தேவியின் சிலம்பைத்தான் கோவலன் விற்க முனைந்திருக்கிறான் என்ற அடிப்படையிலேதான் மன்னவனின் பதில் இன்னமும் அமைகின்றது.

கண்ணகி காற்சிலம்பு உடைக்க, வாய்முதல் தெறித்த மணியினைக் கண்டவுடன்,

''மன்பதை காக்கும் தென்புலம் காவல்
என்முதல் பிழைத்தது; கெடுக என் ஆயுள்!''

எனக் கூறிக்கொண்டே மயங்கி வீழ்ந்து மடிகின்றான். அம் மாவேந்தன்.

கற்புக்கரசி கண்ணகிதேவியின் தோற்றத்தாலும் சொல்லினாலும் நாடாளும் மன்னவனே நடுநடுங்கி மடிகின்ற நிலை ஏற்படுகின்றது. இக் காட்சியைத் தெளிவாக எடுத்துக்காட்டும்வண்ணம் 'வழக்குரை காதை' இறுதியில் மூன்று முந்நான வெண்பாக்கள் உள்ளன.

இவ்வெண்பாக்களை எழுதியவர் இளங்கோவடிகள் தானா என்பதில் தமிழறிஞர்களுக்குள் கருத்து மாறுபாடுகள் உள்ளன. பதிகம், காண்டங்களின் இறுதியில் காணப்படும் கட்டுரைகள், நூலின் இறுதியில்

உள்ள கட்டுரை, சில காதைகளின் இறுதியில் இடம் பெற்றுள்ள வெண்பாக்கள் ஆகியவை சிலப்பதிகாரத்தின் பால் மிக்க ஈடுபாடுகொண்ட சிறந்த புலவரால் எழுதி இணைக்கப்பட்டிருக்கலாம் என்பர். இதே கருத் தைத்தான், டாக்டர் மு. வ. அவர்களும் சிலப்பதிகார வகுப்புகளில் வெளியிட்டிருக்கின்றார்.

வழக்குரை காதையின் இறுதியில் காணப்படும் மூன்று வெண்பாக்களில் ஒரு வெண்பாவை மட்டும் இவண் காண்போம். கண்ணகியின் தோற்றமும் ஆற்றலும் வேந்தனை உயிர்ப்பலி கொண்ட காட்சி, அவ் வெண்பாவில் எங்ஙனம் இயற்கையாகப் படம் பிடித்துக் காட்டப்படுகிறது என்பதனைப் பார்ப்போம்.

''மெய்யிற் பொடியும், விரித்த கருங்குழலும்,
கையில் தனிச்சிலம்பும், கண்ணீரும்—வையைக்கோன்
கண்டளவே தோற்றான், அக் காரிகைதன் சொற்செவியில்
உண்டளவே தோற்றான், உயிர்''

இதுதான் அவ்வெண்பா!

'செங்கோல் தென்னவர் காக்கும் நாடென எங்கணும் போகிய இசையோ பெரிதே' எனக் கோவலனால் போற்றிப் புகழப்பட்ட தென்னவர் குலத்து மன்னவன் பாண்டியன் நெடுஞ்செழியன், கண்ணகியின் உடலிலே படிந்துள்ள புழுதியையும், விரிந்து கிடக்கின்ற கூந்தலையும், கையிலே இருக்கின்ற ஒற்றைச் சிலம்பையும், கண்ணீரையும் கண்ட அளவிலேயே வழக்கில் தோற்றுவிட்டதாயும், அவளது சொல்லினைச் செவியால் கேட்ட அளவிலேயே உயிரை விட்டதாயும், நம் மனக்கண்முன் அழகிய ஓவியமாக அக் காட்சியைச் சித்தரித்துக் காட்டுகிறது, இவ் வெண்பா.

'மெய்யிற் பொடியும்' என்பதிலிருந்து, கண்ணகி தன் உடம்பிலே புழுதி படிந்துள்ள நிலையிலே அரசன் முன்னால் வந்திருந்தனள் என்பது தெளிவு. அங்ஙனம் அவள் உடல் முழுமையும் புழுதிபடியக் காரணம் என்ன? கொலையுண்ட இடத்திற்குச் சென்று கோவலனைக் கண்ட கண்ணகி, அவன் மேலே விழுந்து, அவனை மார்போடு எடுத்துத் தழுவி நிற்கின்றாள். அங்ஙனம் அவள் விழுந்த அந்த இடத்தில் புழுதி படிந்திருந்ததை,

'புண்பொழி குருதியிராய்ப் பொடியாடிக் கிடப்பதோ?'

எனக் கண்ணகி, தன்கணவன்புழுதியில் கிடப்பதற்காக வருந்திக் கூறுகின்ற அடியால் அறியலாம். புழுதி படிந்துள்ள தரையில் விழுந்து, அப்புழுதி உடம் பெங்கும் படியுமளவிற்குப்புரண்டு புலம்பியதனைக் காட்டவே 'மெய்யிற் பொடியும்' என்கிறார் புலவர். இங்ஙனம் புழுதிபடிந்த கண்ணகியின் நிலையைப் பார்த்தவுடன் அவள் துயரத்திற்குக் காரணம் எதுவென்று அறியாமல் பாண்டியன் பதறியிருத்தல் வேண்டும். அதனாற்றான் மன்னன் தோற்றமைக்குக் கண்ணகியின் புழுதிபடிந்த உடம்பும் ஒரு காரணமாகக் கூறப்பட்டிருக்கிறது.

அடுத்து, கணவனை இழந்ததன் காரணமாய் அழுது புலம்பித் தரையில் விழுந்து புரண்டிட, அவளது கரிய கூந்தலானது கட்டவிழ்ந்து விரிந்து கிடப்பதனால் 'விரித்த கருங்குழலும்' என்றார். யாரையேனும் இழந்த நிலையிலோ வேறு வகையிலோ துன்பத்திற்குள்ளாகும் பெண்டிர், விரிந்து கிடக்கும் கூந்தலுடன் காட்சி யளிப்பது இயற்கைதானே! இக்காலத்து நிலையும் அது தானே! துணைவனை இழந்த கண்ணகியும் தன் துயரத் தின் அடையாளமாக அவிழ்ந்து கிடக்கின்ற கருங்

கூந்தலுடன் காட்சியளிக்கின்றாள். இங்ஙனம், கூந்தல் விரிந்து கிடக்கின்ற நிலையில் தனக்கு முன்னால் நின்று கொண்டிருக்கும் கண்ணகியைக் கண்ட அளவிலே அஞ்சுகிறான் அரசன். அதனை, '...காலெல்லாம் சூழ்ந்த கருங்குழலும் கண்டஞ்சி, கூடலான், கூடாயினான்' என வரும், வேறொரு வெண்பா அடியும் விளம்புகிறதன்றோ? எனவே இதனாலும் பாண்டியன் தோற்றான் என்றார்.

'கையில் தனிச்சிலம்பும்' என வந்தமையால், அவளது கையிலே சிலம்பொன்று இருந்ததாகக் காட்டுகிறார் புலவர். இனி, தனிச்சிலம்பு என்பதற்கு ஒப்பற்ற சிலம்பு எனவும் கொள்ளலாம். தன் கணவன் கள்வன் அல்லன் என்பதை உறுதிப்படுத்தவும், அதன் மூலம் தன் கற்பின் மேன்மையை உலகிற்குக் காட்டி நீதியை நிலைத்திடச் செய்யவும் அவளிடத்தில் இருந்த ஒரே ஒரு சான்று அச் சிலம்பாகும். எனவேதான், அதனைத் 'தனிச்சிலம்பு' என உயர்த்துக் கூறுகிறார் புலவர். கண்ணகியின் கையிலிருக்கும் அச்சிலம்பினைக் கண்டும் பாண்டியன் தோல்வியடைகின்றான். அரசியின் சிலம்பு காணாமற்போகவே, அதனைக் களவாடிச் சென்றதாகக் கருதி ஒருவனைக் கொலைசெய்ய, அதே நாளில் அரசியின் சிலம்பினையொத்த சிலம்பொன்றைக் கைக் கொண்டவளாகத் தன்னை காண ஒருத்தி வந்திருக் கிறாளே என்று அரசனை எண்ணச் செய்தமையால், அதனாலும் தோற்றான் என்கிறார்.

இறுதியாக, 'கண்ணீரும்' எனக்கூறி, கண்ணகியின் கண்களிலிருந்து பொங்கிவருகின்ற கண்ணீரையும் நமக்குக் காட்டத் தவறவில்லை புலவர். அது சாதாரணத் துயரத்திற்காக வடிக்கின்ற கண்ணீர் அன்று. 'அல்லலுற்று ஆற்றாது அழுவாளது' (ஊர் சூழ்வரி)

கண்களிலிருந்து பீறிட்டுக்கொண்டு வருகின்ற கண்ணீர் அன்றோ? இத்தகைய கண்ணீர் பொங்கிவரும் நிலையில் தன் முன்னால் நிற்கும் கண்ணகியைக் கண்டு, மன்னவன் தன்னிலை இழந்திருத்தல் வேண்டும். அவ்வாறு இல்லையெனில் தன்னைக் காண வந்த அவள் தோற்றத்தைக் கண்டு, 'நீர்வார் கண்ணை எம்முன் வந்தோய்!' எனக் கேட்கவேண்டிய அவசியம் இல்லை.

"அல்லற்பட்டு ஆற்றாது அழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை."

என அத்தகைய கண்ணீரின் ஆற்றலைப்பற்றி அழகாகக் கூறுகின்றார் தெய்வப்புலவர் திருவள்ளுவர். ஆம்! கண்ணகி வடித்த கண்ணீரும் அத்தகையதே! அதனால் 'செல்வத்தைத் தேய்க்கும் படை'யாய் அது தோற்றமளிக்கிறது, மன்னவனுக்கு! அக் கண்ணீரைக் கண்ட மன்னவன் உள்ளம், தோல்வியைத் தழுவத்துடிப்பதில் வியப்பில்லையன்றோ?

இங்ஙனம் கண்ணகியின் தோற்றத்தைக் கண்டு அஞ்சி வழக்கிலே தோற்ற பாண்டியன் நெடுஞ்செழியன், அவளது சொற்களைச் செவிகளில் கேட்ட அளவில் உயிரையே விட்டுவிடும் நிலை ஏற்படுகிறது. கோவலனையே கள்வன் என நினைத்துக் கொண்டிருக்கிறான் பாண்டியன். 'கள்வனைக் கோறல் கடுங்கோல் அன்று' என்ற கருத்தில்தான் அவன் உரையாடிக் கொண்டிருக்கின்றான். அநீதி ஏதும் ஏற்படவில்லை என்ற எண்ணத்துடன்தான் இருக்கின்றான். ஆனால், கண்ணகி உண்மையை உணர்த்தியவுடன்,'அநீதி நடந்துவிட்டதே' என அலறுகிறான்; 'யானே கள்வன்' என அரற்றுகிறான்; 'வளையாத செங்கோல் வளைந்ததே' என மனம் மிக வருந்துகின்றான்; உயிரையே இழக்கின்றான்! இதனைத்

தான், 'காரிகைதன் சொற்செவியில் உண்டளவே தோற்றான் உயிர்' என இவ்வெண்பா விளம்புகின்றது.

'நீதியைக் கொன்றோமே' என்ற வருத்தம் அவனை வாட்டிய நிலையிலேயே உயிரை விடுகின்றான். நீதிக்குச் சாவுமணி அடித்து, அநீதியை அரவணைத்த நிலையில் ஆட்சி செலுத்துவதைவிட, தன் உயிருக்குச் சாவுமணி அடித்தலே சாலச்சிறந்தது என எண்ணியதால் சரித்திரத்தில் சாகாவரம் பெற்றுத் திகழ்கின்றான் அவன். ஆம்! பாண்டின் இறந்தான்—அவன் இறப்பினால் அந் நாட்டின் நீதி நிலைத்தது! வளைந்த செங்கோல் நிமிர்ந்தது!!

கற்பின் கனலி கண்ணகியின் தோற்றத்தைக் கண்டு தோற்ற நெடுஞ்செழியப் பாண்டியன், அவள் சொல்லாற்றலால் உயிரை இழக்கின்றான். அக்காட்சியினை நம் மனக்கண்முன் அப்படியே காட்டுவதுதான், சிலப்பதிகார வழக்குரை காதையின் இறுதியில் இடம் பெற்றுள்ள, இவ் வெண்பா ஓவியமாகும்.

## 7

# பௌத்தம் வளர்த்த இலக்கியம் -குண்டலகேசி*

தமிழ் இலக்கியத்திற்குச் சைவம், வைணவம், பௌத்தம், சமணம், கிறித்தவம், இஸ்லாம் ஆகிய மதங்கள் அனைத்துமே தம்மால் இயன்ற தொண்டுகளை ஆற்றியுள்ளன. பௌத்தமதச் செல்வாக்குத் தமிழகத்தில் பல்கிப் பெருகியிருந்த காலத்தில் அம் மதத்தால் தமிழ் மொழி பெற்ற வளர்ச்சி குறிப்பிடத்தக்கதாகும். பௌத்த மதத்தைச் சார்ந்த பல தமிழ்நூல்கள் நமக்குக் கிடைக்கவில்லை. அவை காலவெள்ளத்தால் அழிந்துபட்டன என்பதைவிட, சமயக் காழ்ப்பால் அழிக்கப்பட்டன என்பதே சாலப் பொருந்தும். வைதீக, சமண மதங்களின் எதிர்ப்பைத் தாங்கமுடியாமல் தமிழக்த்தில் பௌத்தம் நிலை குலைந்து போனபோது, பௌத்த இலக்கியங்கள் பலவும், காப்பாற்றுவார் இல்லாமையால் நிலைத்து வாழ இயலாமல் போய்விட்டன.

ஐம்பெருங் காப்பியங்களில் இடம் பெற்றுள்ள மணிமேகலை, குண்டலகேசி ஆகிய இரண்டும் பௌத்த மதத்தைச் சார்ந்த நூல்களாகும். புத்தமித்திரர் என்பவரால் இயற்றப்பட்ட வீரசோழியம், தமிழ் ஐந்து இலக்கணங்களையும் கூறும் இலக்கண நூலாகும்.

---

* *23-10-1979 அன்று, இரவு 9.30 மணியாவில் சென்னை வானொலியில் ஒலிபரப்பானது.*

மேலும் சித்தாந்தத் தொகை, திருப்பதிகம், விம்பசார கதை ஆகிய பௌத்த நூல்கள் இருந்ததாகப் பெயரளவில் அறிகின்றோம். பௌத்த நூல்களுள் முழுமையாகக் கிடைப்பவை மணிமேகலையும் வீர சோழியமும் தான். குண்டலகேசி பத்தொன்பது பாடல் களோடு மட்டும் பரிதாபமாகக் காட்சியளிக்கிறது.

குண்டலகேசியை இயற்றியவர் நாதகுத்தனார் என்பர். இது ஒரு தருக்க நூலாகும். தருக்க வாயிலாகச் சமணம், வைதீகம் முதலான மதங்களைப் புறங்காணும் நூல் குண்டலகேசியாகும். பெரும்பாலும் விருத்தப் பாவினால் இயற்றப்பட்டுள்ளமையால் 'குண்டலகேசி விருத்தம்' என்றும் இந்நூல் வழங்கப்படுகிறது.

குண்டலகேசியின் வரலாறு பௌத்த நூலாகிய தேரிகாதையிலும், புத்தகோசரின் தம்மபத உரையிலும், சமய திவாகர வாமன முனிவரின் நீலகேசி உரையிலும் கூறப்பட்டுள்ளது. அவற்றின் மூலமும் ஓரளவுதான் அறிய முடிகிறது. குண்டலகேசி ஒரு வைசிய கன்னி. அவள் ஒரு நாள் மாளிகையின் மாடத்தில் விளையாடிக் கொண்டிருக்கிறாள். அவ்வழியே சிறைப்பிடிக்கப்பட்ட காளன் என்னும் கள்வனைக் கொலைக்களம் நோக்கி அழைத்துச் செல்கின்றனர் சிலர். அவனைக் காணு கின்றாள் அக் கன்னி! காதல் கனிசிறது. பின், கை கூடவும் செய்கிறது, அவள் தந்தைசெய்த தந்திரத்தால். ஆம்! கொடுக்க வேண்டியதைக் கொடுக்கவேண்டியவர் களுக்குக் கொடுத்துக் கொலைக்களம் செல்லவிருந்த காளனைக் கூட்டிவந்து, தன் குமரிக்குத் திருமணம் செய்து வைக்கின்றார் குண்டலகேசியின் தந்தை. நாட்கள் நகருகின்றன. ஒரு நாள். ஊடற்காலம். 'என்ன இருந்தாலும் நீ ஒரு கள்வன் தானே' எனக்குண்டலகேசி விளையாட்டாகக் கூற, வினையாக எடுத்துக்கொண்ட

காளன், அந்நேரம் அதனை வெளிக்காட்டவில்லை. உதட்டளவில் அன்பாகப் பேசுவதுபோல் நடிக்கின்றான். உள்ளத்தளவில் அவளை எப்படிப் பழிவாங்குவது எனத் திட்டமிடுகின்றான். வஞ்சகமாக அவளை அழைத்துக் கொண்டு ஒரு மலையுச்சிக்குச் செல்கின்றான். 'என்னை இகழ்ந்த உன்னை இங்கிருந்து உருட்டிக் கொல்லப் போகின்றேன். நீ வழிபடும் கடவுளை வணங்கிக்கொள்' என்கின்றான், கணவன் என்னும் பெயரில் வந்த அக் கயவன். கொலைக்களம் செல்லவிருந்தவனை மீட்டுக்கொண்டு வந்தது அவள் செய்த தவறுதானே. குமுறினாள் குண்டலகேசி. உள்ளங் கொதித்தாள். 'தற்கொல்லியை முற்கொல்ல வேண்டும்' என்னும் முதுமொழியை மதித்தாள். 'கணவனே கண்கண்ட தெய்வம்' எனும் மொழியை மிதித்தாள். 'கயவனா, கண்கண்டதெய்வம்?' என்னும் வினா அவள் உள்ளத்தில் வெடித்துக் கிளம்பியது. வஞ்சகத்தை வஞ்சகத்தால்தான் வீழ்த்த வேண்டும்; முள்ளை முள்ளால்தான் எடுக்க வேணடும் என்ற முடிவுக்கு வந்தாள். 'உன்னைத்தவிர வேறு தெய்வம் இல்லை; உன்னையே வணங்குகிறேன்' என்று உதட்டளவில் உரைத்தாள். அவனை வலம் வருவதுபோல் பின்புறம் சென்று அவ் வஞ்சக நெஞ்சினனை அம் மலைமுகட்டிலிருந்து உருட்டிக் கொன்றாள். பின்னர், பௌத்தப்பள்ளி புகுந்து துறவி யானாள். பிற சமயவாதிகளோடு வாதஞ்செய்து வென்று, பௌத்தமதத்தை மேலோங்கச் செய்கின்றாள். இதுவே குண்டகேசியின் கதையாக நமக்குக் கூறப்படு கிறது.

குண்டலகேசிப் பாடல்கள் பத்தொன்பதும் கால வெள்ளத்தைக் கடந்து எஞ்சி நிற்பவையாம். அவற்றுள் சில பாடல்களின் நயங்களையும் கருத்துகளையும் இனிக்

காண்போம். குண்டலகேசிக் காப்பியத்தின் அவையடக்கப் பாடலே சுவை மிகுந்ததாகும்.

"நோய்க்குற்ற மாந்தர் மருந்தின் சுவை நோக்க கில்லார்
தீக்குற்ற காத லுடையார் புகைத்தீமை யோரார்"

என்னும் அப்பாடலில் அமைந்துள்ள உவமைநயம் பாராட்டுதற்குரியது. நோயாளிகள் மருந்தின் சுவையை எண்ணமாட்டார்கள். நோய் தீர்வது ஒன்றையே எண்ணுவார்கள். குளிரால் வருந்தி நெருப்புக்காயும் நினைப்புடையோர், அந்நெருப்பிலிருந்து எழும் புகையை ஒரு பொருட்டாக கருதமாட்டார்கள். புத்த தேவனுடைய புகழைக் கூறும்போது, தம்பால் உள்ள குற்றங்களை யாரும் குற்றங்களாக எண்ண மாட்டார்கள். அவையடக்கப் பாடலில் காப்பிய ஆசிரியரின் இத் திறன் கண்டு வியக்கின்றோம்.

'மெய்த்துவம்' பற்றிய பாடலில் போலித்தவசிகளைத் தோலுரித்துக் காட்டுகின்றார் இந்நூலாசிரியர். தவவேடங்கள் அனைத்தும் ஏமாற்றுச் செயல்களே என்பது அவர்தம் கருத்தாக மிளிர்வதைக் காணலாம். காவி ஆடை அணிதல், ஆடையின்றி நிர்வாணமாதல், சாம்பல் திருநீறு முதலியவற்றை உடம்பில் பூசுதல், பனியிலும் மழையிலும் நீருள் நிற்றல், கோடையில் நெருப்பருகில் நிற்றல், பிச்சை எடுத்துத் திரிதல், சடை வளர்த்தல், மழித்தல் ஆகிய அனைத்துமே வெறும் வார்த்தைகள்தாம் என்கிறார் குண்டலகேசியார்.

"போர்த்தல் உடைநீக்குதல் பொடித்துகள் மெய்பூசல்
கூர்த்த பனி ஆற்றுதல் குளித்து அழலுள் நிற்றல்
சார்த்தர் இடு பிச்சையர் சடைத்தலையர் ஆதல்
வார்த்தை இவை; செய்தவம் மடிந்து ஒழுகல் என்றான்."

ஆம்! உண்மையான தவஒழுக்கம் என்பது புலன்களை அடக்கி ஒழுகுதல் என்பதே குண்டலகேசியார் கூறும் கருத்தாகும்.

அவா அறுத்தல் என்பது நுகர்ச்சியினால் இயலாது என்பதனைத் தக்க எடுத்துக்காட்டுகளுடன் விளக்கிக் கூறுகின்றார் இந்நூலாசிரியர். 'அழையழல் அழுவந் தன்னை நெய்யினால் அவிக்கலாமோ?' என்றும், 'புனலினைப் புனலினாலே யாவர் போகாமை வைப்பார்' என்றும், அவர் கூறியுள்ள காட்டுகள் கருதத் தக்கன. தீப்பற்றி எரிகின்ற காட்டினை எண்ணெய் ஊற்றி அணைக்க இயலாதன்றோ? அதுபோல் காமத்தீயினைச் காமநுகர்ச்சியினாலும் அணைத்திட இயலாது. பெருகி வரும் வெள்ளத்தை மற்றுமொரு வெள்ளத்தால் அணையிட்டுத் தடுக்க முடியாதன்றோ? அதுபோல், காமத்தைக் காமநுகர்ச்சியினாலும் போக்கிட முடியாது. இவற்றால், ஆசையை அடக்குதற்கு வழி அனுபவிப்பது தான் என்னும் கொள்கை முற்றிலுமாக மறுக்கப் படுவதைக் காணலாம்.

உயிரை மாய்க்கும் வாளாகவே ஒவ்வொரு நாளையும் மதித்தவர் வள்ளுவப் பெருந்தகை.

"நாளென ஒன்றுபோற் காட்டி உயிரீரும்
வாளது உணர்வார்ப் பெறின்" (குறள் 334).

என்னும் குறளில் அக் கருத்து வலியுறுத்தப்படுவதைக் காணலாம். குண்டலகேசியாரும் இதே கருத்துடைய வராகத்தான் காணப்படுகிறார்.

"வாளின் வாய்த் தலைவைப்பாக்குச் செல்கின்றோம்;
வாழ்கின்றோமோ?"

என்னும் வரி அதனை உறுதிப்படுத்துகின்றது எனலாம். நாளாகிய வாளின்கண் நமது தலையை வைப்பதற்காக

நாள்தோறும் செல்கின்றோமே தவிர, நாம் வாழ்கின்றோமா என்றால் அதுதான் இல்லை என்கிறார்.

சாவின் தன்மையைக்கூறிச் சஞ்சலத்தின் எல்லையைக் காட்டும் மற்றுமொரு பாடலைக் காண்போம்.

''பாளையாம் தன்மை செத்தும்
பாலனாம் தன்மை செத்தும்
காளையாம் தன்மை செத்தும்
காமுறு இளமை செத்தும்
மீளும்இவ் வியல்பும் இன்னே
மேல்வரு மூப்பு மாகி
நாளும்நாள் சாகின் றாமால்
நமக்கு நாம் அழாதது என்னே?''

என்னும் பாடலில், வாழ்நாளில் ஒவ்வொருவரும் எத்தனை முறை சாகின்றார்கள் என்பது பட்டியல் போட்டுக் காட்டப்படுகின்றது. அன்னையின் கனகமணி வயிற்றில் கருவுற்றிருந்த பருவத்திலிருந்து இறந்தோம்; பின்னர்க் குழந்தைப் பருவத்திலிருந்தும் இறந்தோம்; அதன்பின்னர் காளைப்பருவத்திலிருந்தும் இறந்தோம்; கன்னியரைக் கண்டு காமங் கொள்ளும் இளமைப் பருவத்திலிருந்தும் இறந்தோம்; இனிவரும் மூப்புப் பருவத்திலிருந்தும் இறந்து ஒழிதல் திண்ணம். நம் சுற்றத்தார், மற்றவர்கள் இறப்பிற்காக அழுகின்ற நாம், ஒவ்வொரு பருவத்திலும் இறக்கின்ற நமது இறப்புக்காக அழுவதில்லையே, ஏன்? என்ற வினாவுடன் இப்பாடலை முடிக்கின்றார் இந்நூலாசிரியர். இத்தகைய வினாக்கள் எழுப்பப்படுவதற்கே காரணம், மனிதனின் தலைக் கனத்தை மட்டந்தட்டத்தான்! கருப்பையின் இருட்டிலிருந்து கல்லறையின் இருட்டிற்குப் பயணம் செய்யும்

சாதாரணப் பிறவிதான் நீ என்பதை மனிதனுக்கு நினைவுறுத்தத்தான்!! அந்த வினாக்களை அடித்தள மாகக்கொண்டுதான், மதங்கள் என்னும் வியூகங்கள் வகுக்கப்பட்டுள்ளன. தப்பிக்க இயலாத மனிதர்களின் மத்தியில் 'உலகே மாயம் வாழ்வே மாயம்' என்னும் மாயாவாதம் குதியாட்டம் போடுகிறது. இப்பாடலில் ஆசிரியர் எழுப்பியுள்ள வினாவை, பௌத்த மதத்தின் நிலையாமைத் தத்துவத்தின் வெளிப்பாடாக நாம் கொள்ளலாம்.

இங்ஙனம், பௌத்தமதக் கோட்பாடுகளை விளக்கு வதற்காக எழுந்த குண்டலகேசி, முழுமையாக நமக்குக் கிடைக்கவில்லையே என்ற குறை - இல்லை _ ஏக்கம் நம் நெஞ்சில் இல்லாமல் இல்லை. சமயப் பொறாமையால் சமயப் பிணக்கால் நாம் இழந்த இழப்பாக அதனைக் கொள்வோமாக! பத்தொன்பது பாடல்களாயினும் கிடைத்தனவே என்பதில் சற்று மன ஆறுதல் அடைவோ மாக! பௌத்தம் வளர்த்த பைந்தமிழை நாமும் வளர்ப்போமாக!!

# 8

## தாயுமானவர் சிந்தனைகள்*

### [1]

உலகம் உய்வதற்கு உயர்நெறிகள் கூறிச்சென்ற உத்தமர் பலராவார். அவர்தம் சிந்தனைகளால் இவ்வுலகத்தார் பெற்ற பயன்கள் பலவாகும். தமக்காக வாழாமல் பிறர்க்காக வாழும் தன்மைபெற்ற தியாக சீலர்கள் அவர்கள். இவ்வுலகம் இன்றளவும் அழியாமல் இருக்கக் காரணமே, அத்தகைய சான்றோர்தாம் என்கிறார் புறநானூற்றுப் புலவர் ஒருவர். பண்புடைய சான்றோர் இல்லையெனில், என்றைக்கோ மண்ணுக்குள் மாய்ந்திருக்கும் இம் மாபெரும் உலகம் என்கிறார் வள்ளுவப் பெருந்தகை.

மக்களை மக்களாக வாழத் தூண்டும் சிந்தனைச் சிற்பிகள் அவர்கள். அச் சான்றோர்தம் சிந்தனை மலர்களால் நறுமணங் கமழப்பெற்ற சமுதாயச் சோலைகள் பலவாகும். அத்தகைய சிந்தனையாளர் வரிசையில் சிறப்பிடம் பெறுபவர் தாயுமானவர் ஆவார். எவ்வுயிரையும் தன்னுயிர்போல் எண்ணும் இதயம் பெற்றவர்; இரக்கசிந்தையும் அருள்நெஞ்சமும் கொண்டவர்; உலகத்தார் நலனுக்காகத் தன்னலத்தைத் துறந்தவர்; உண்மை நெறிவழி நின்றவர் தாயுமானவர் ஆவார்.

---

* *15-10-78; 16-10-78; 17-10-78* ஆகிய நாட்களில் சென்னை வானொலியில் ஒலிபரப்பானவை.

திருமறைக்காட்டுக் கேடிலியப்பரின் திருமகனாகப் பிறந்த தாயுமானவர், உலகம் போற்றும் பெருமகனாக உயர்புகழ் பெற்றுச் சிறப்படைந்தார். தன்னைத் தாழ்வாகக் கருதும் தன்மையில் தரணிக்கே எடுத்துக் காட்டாய்த் தலைசிறந்து விளங்கியவர் அவர். "என் போல் எளியவரும் எங்கெங்கு பார்த்தாலும்... உண்டோ?" [பராபரம், 116] எனத் தன் தாழ்வெனும் தன்மையினைத் தக்க முறையில் வெளிப்படுத்தியுள்ளார் அவர்.

"எத்தனை விதங்கள்தான் கற்கினும்
கேட்கினும் என் இதயமும் ஒடுங்கவில்லை;
யான் எனும் அகந்தைதான்
எள்ளளவும் மாறவில்லை..."
[ஆனந்தமான பரம், 9]

என்ற பாடல், தாயுமானவர்தம் தன்னடக்கத்தைப் புலப்படுத்தும் தலையாய பாடலாகும்.

மனிதனின் அழிவுக்கும் இழிவுக்கும் காரணமே 'தான்' என்னும் அகந்தைதானே! 'தான்' என்னும் தன் முனைப்பால் தருக்கித் திரிவோர், தடுமாறிவிழும் படுகுழிகள் பலவன்றோ? உலக நடைமுறையில் அத்தகை யோரை நாளும் சந்தித்துக்கொண்டுதானே இருக் கின்றோம். இதயம் ஒடுங்கவேண்டும்; அகந்தை நடுங்க வேண்டும் என்பதே தாயுமானவர் உள்ளக்கிடக்கை.

'மனம் ஒரு குரங்கு' என்பார் அவர்.

"கொள்ளித் தேள்கொட்டிக்
குதிக்கின்ற பேய்க்குரங்காய்
கள்ளமனந் துள்ளுவதேன்?..."

[பராபரக்...172]

என்பார். ஆம்! துள்ளுகின்ற கள்ள மனத்தை, குதிக்கின்ற பேய்க் குரங்காய்க் காணுகின்றார் அவர்.

'மனக்குரங்கு கால்விட்டோட' [காடுங்...1]

'மனமெனும் போய்க்குரங்கின் பின்னே'

[கல்லாலின் 4]

என்றெல்லாம் மனத்தைப்பற்றிக் கூறி, அதனை அடக்கியாளுவதில்தான் மனிதகுல சிறப்பே அடங்கியிருக்கிறது என்கிறார்.

"சினமிறக்கக் கற்றாலும்
சித்தியெல்லாம் பெற்றாலும்
மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன்..."

என்னும் கண்ணியில், எல்லாவித சித்திகளைப் பெற்றாலும் பொல்லாத சினத்தை அடக்கிக்கொள்ளக் கற்றாலும், மனத்தை அடக்கியாளக் கற்கவில்லையெனில் அவர்தம் வாய்ப்பேச்சினால் ஒரு பயனும் இல்லை என்று ஆணித்தரமாகத் தம் கருத்தை எடுத்து வைக்கின்றார்.

மனம் எப்படியெல்லாம் ஆட்டிப் படைக்குமாம் தெரியுமா?

"...கல்லோடு இரும்புக்கு மிகவன்மை காட்டிடும்;
காணாது, கேட்ட எல்லாம்
கண்டதாக் காட்டியே அணுவாச் சுருக்கிடும்;
கபட நாடக சாலமோ
எல்லாமும் வல்லது இந்த மனம்..."

[எங்கு நிறை...4]

என்கிறார் தாயுமானவப் பெருந்தகை. கல்லைக் காட்டிலும், இரும்பைக் காட்டிலும் தனக்கே மிக்க வலிமை உண்டு என்று காட்டிக் கொள்ளுமாம்; அது மட்டுந்தானா? காதால் கேட்டதையெல்லாம் கண்ணாரக் கண்டதுபோல நினைக்கச் செய்யுமாம்; வஞ்சக நாடகம் ஆடுமாம். இங்ஙனம் எல்லா வகையிலும் வல்லமை பெற்றுத் திகழ்வதுதான் மனம் எனச் சித்தரிக்கின்றார் அவர். காற்றில் அகப்பட்ட இலவம்பஞ்சு, ஆடுகறங்காம் காற்றாடி, வாலற்ற பட்டம்—மனத்திற்கு அவர் கொடுக்கும் 'மரியாதை' மொழிகள் இவைகளாகும்.

அத்தகைய மனத்தினது செருக்கினை அறுத்திடுவதற்கான மார்க்கத்தையும் நமக்குக் காட்டுகின்றார் அவர். எப்படி? ஆணவம் இருக்கிறதே அது ஒரு பெருங் காடு. முதலில் திருத்தவேண்டியது அக் காட்டைத்தான். யான், எனது என்னும் செருக்குத்தான் மூடியிருக்கும் கற்பாறை. அக் கற்பாறை பிளந்து எறியப்படவேண்டும். அதனால் திருத்தமுறும் நல்ல நிலம்தான் மனம் அம் மனமாகிய நிலத்தைத் துப்புரவு செய்யவேண்டும். அந்நிலத்தில், 'பேச்சற்ற நிலை' என்னும் மோன நிலையாகிய விதையினை விதைக்கவேண்டும்; அன்பு என்னும் நீரினைப் பாய்ச்சவேண்டும். மோனவிதை முளைவிட்டுப் பயிராகிப் பலன்தரும் காலத்தில்தான் மிக விழிப்பாக நாம் இருக்கவேண்டும். 'அற்ற குளத்து அறுநீர்ப் பறவைகள்' பல பலன் உற்ற இடம் நோக்கிப் பறந்துவரப் பார்க்கும்; பாடுபடாமல் பலனைமட்டும் அனுபவிக்க நினைக்கும்; அப் பறவைகளை விரட்டியடிக்க வேண்டும்; விளைவைப் பாதுகாக்கும் விவேகம் அப்போதுதான் மிக வேண்டும். அங்ஙனம் விளைந்த போகத்தைப் பசித்துண்ணும் உண்மை அன்பர்

கூட்டத்தை உருவாக்க விழைந்தவர் தாயுமானவர் ஆவார்.

ஆம்! ஆணவம் அழிக்கப்படவேண்டும்; அன்புவழி பேணப்படவேண்டும்; மனம் எனும் குரங்கு ஒடுக்கப்பட வேண்டும் என்பனபோன்ற தாயுமானவரின் சிந்தனை கள், மனித சமுதாயத்தை விழிக்கச் செய்யும் ஆற்றல் மிக்கவை எனலாம்.

[2]

தாயுமானவர் சிந்தனைகளில் தலையாயது அவரது சமயப் பொது நோக்காகும். சமரசக் கொள்கையே தாயுமானவரின் சமயக்கொள்கை எனலாம். ஆறுகள் பல என்றாலும் அவை சென்று சேருமிடம் கடல் ஒன்று தானே! அதுபோலச் 'சமயங்கள் பல என்றாலும் அவை அனைத்தும் நாடுவது ஓர் இறைவனையே என்னும் சீரிய கொள்கை உடையவர் அவர்.

"வேறுபடும் சமயமெல்லாம் புகுந்து பார்க்கின்
விளங்குபரம் பொருளேநின் விளையாட் டல்லால்
மாறுபடுங் கருத்தில்லை முடிவில் மோன
வாரிதியின் நதித்திரள்போல் வயங்கிற் றம்மா!"

[கல்லாலின் 25]

என்னும் பாடல் அனைத்துச் சமயங்களையும் சமமாகக் கருதுபவர் தாயுமானவர் என்பதை உறுதிப்படுத்துகின்ற தன்றோ?

சமய வாதங்களை அடியோடு வெறுப்பவர் தாயுமானவர் ஆவார். ஒவ்வொரு சமயத்தாரும் தத்தம் சமயமே சிறந்தது என வாதிட்டு மோதுகின்ற

அவலநிலை ஆரோக்கியமான சமயநெறிக்கு அழகல்ல என்பது அவர்தம் கருத்து. அதனாற்றான்,

'...தந்தெய்வம் எந்தெய்வம் என்று
எதிர் வழக்கிடவும் நின்றது எது?'

என வேதனையுடன் வினவுகின்றார்.

'வாதமிடும் சமய நெறிக்கு அரியதாகி' என்றும்
[பொருள் வணக்கம், 11]
'வாதமிடு பரசமயம் யாவுக்கும் உணர்வரிய' என்றும்
[மலைவளர் காதலி, 6]

சமயங்களை வைத்து வாதிடுவதால் பயன் ஒன்றுமில்லை என்கின்றார் தாயுமானவர். சமயங்களின் பிணக்குக்கும் பூசலுக்கும் அளவே இல்லை. அவைகளைக் கணக்கிடத் தொடங்கினால், கடல் மணலை எண்ணப் புகுந்த கதையாகத்தான் முடியும் என்பதனை,

''தலைபலவாம் சமயமென்றும்
தெய்வமென்றும்......தர்க்கம் என்றும்
கடலுறுநுண் மணல்எண்ணிக் காணும் போதும்''

என்ற பாடல் மூலம் நமக்கு தெரிவிக்கின்றார்.

சாவிபோன்று பயனற்ற ஒன்றே சமயம் எனவும், அச் சமயக்குழியில் ஆழ்ந்து தவியாய்த் தவிப்பதாகவும் கூறுகின்றார், தாயுமானவர்.

'சாவிபோம் சமயத்து ஆழ்ந்து
சகத்திடை தவிக்கின் றேனே!''
[சிவன் செயல் 2

என்பது அவர்தம் 'தவிப்புக்' குரலாகும்.

சமய நெறி என்னும் சுற்றுக்குள்ளேயே நின்று சுழன்று சுழன்று அல்லற்படும் அவலநிலை எப்போது அகலுமோ என ஏங்குகின்றார் அவர்.

''சொல்லுஞ் சமயநெறிச் சுற்றுக்குள்ளே சுழலும்
அல்லல் ஒழிவது என்றைக்கு ஐயா''

[பராபரக்...305]

என்னும் பராபரக் கண்ணியில், அன்னாரின் ஏக்கம் புலப்படுகிறதன்றோ? சைவ சித்தாந்த வாதியாகத் தம்மைக் காட்டிக்கொண்டாலும் தாயுமானவரின் சமயக்கொள்கை, சமரசக்கொள்கையே எனலாம்.

கடவுட் கொள்கையிலும் தெரிந்த சிந்தனைவாதி யாகவே திகழ்கிறார் தாயுமானவர். 'அன்பைப் பெருக்கி ஆருயிரைக் காக்கவந்த இன்பப் பெருக்காக 'இறை'யைக் கருதியவர் அவர். அவர் தம் பாடல் களில், 'கடவுள் ஒருவரே' என்ற கருத்துத் தான் முக்கியத்துவம் பெறுவதைப் பரக்கக் காணலாம். ''ஒன்றே குலம் ஒருவனே தேவன்'' என்னும் திருமூலரின் கொள்கையும் அதுதானே. பகுத்தறிவுக் கவிஞர் பாரதிதாசன், 'ஒரு கடவுள் உண்டென்போம்? உருவணக்கம் ஒப்போம்' என்றுதானே பாடுகின்றார். தாயுமானவர் சிந்தையும் 'ஒரே கடவுள்' என்னும் கொள்கையில் தோய்ந்ததுதான் என்பதற்கு அவர்தம் பாடல்களில் பல சான்றுகள் உள்ளன.

என்னை யாளும் ஒருவா', 'நின்ற ஒன்றே'

'அறிவு ஒன்றென விளங்கும்' என்றெல்லாம் பல இடங்களில் இறைவன் ஒருவனே எனக் குறிப்பிடு கின்றார். தேன், பால், கனி, கரும்புச் சாறு, கற்கண்டு

இவற்றின் இன்சுவையாய்த் திகழும் கடவுள் ஒருவரே என்பதனை,

''...தேனாகிப் பாலாகிக் கனியாய்க் கன்னல்
செழும்பாகாய்க் கற்கண்டாய்த் திகழ்ந்த ஒன்றே''

என்ற வரிகள்மூலம் நமக்கு வலியுறுத்திக் கூறுகின்றார். மேலும், ஒரு கடவுளாம் அவருக்கு ஊரும் இல்லை; பேரும் இல்லை; உற்றார் பெற்றோர் என்று எவருமே இல்லை என்ற உயரிய கருத்துடையவர் அவர்.

''ஊருமிலார் பேருமிலார் உற்றார்பெற்
றாருடனே யாருமிலார்...''

என்பது தாயுமானவரின் எழுச்சி முழக்கம் ஆகும்.

கடவுளர் அடியெடுத்துக் கொடுக்க, அதன் பிறகு பாட்டுப் பாடியதாகப் பல புலவர்களைப் பற்றிக் கூறுவார்கள். ஆனால் தாயுமானவரைப் பொறுத்தவரை எந்தக் கடவுளரும் பாட்டுப்பாட அடியெடுத்துக் கொடுக்கவில்லை என்பதுதான் உண்மை. அதனை அவர் வாக்குமூலமாகவே நாம் நன்கு அறிந்து கொள்கிறோம். சித்தர் கணம் எட்டாம் பாட்டில் அவர் வாக்கு மூலம் இடம் பெற்றுள்ளது.

''கன்னல் அமுது எனவும் முக்கனி எனவும் வாயூறு
கண்டு எனவும் அடியெடுத்துக்
கடவுளர்கள் தந்ததல; அழுது அழுது பேய்போல்
கருத்தில் எழுகின்ற எல்லாம்
என்னது அறியாமை அறிவு என்னும் இரு பகுதியால்
ஈட்டு தமிழ்; என் தமிழினுக்கு
இன்னல் பகராது உலகம்.........''

என்கிறார் தாயுமானவர். 'கரும்பு, முக்கனி, கற்கண்டு இவற்றின் சுவைபோன்ற இனிமையான பாட்டு அடிகள்,

எந்தக் கடவுளும் எனக்கு அடியெடுத்துக் கொடுத்தவை அல்ல. ஓயாமல் அழுது அழுது எனது எண்ணத்தில் எழுந்தவை. எனது அறியாமை. அறிவு என்னும் இரண்டும் கலந்து நானே பாடியது. அது என்னுடைய தமிழாகும். அந்த என் தமிழுக்குக் குற்றம் எதுவும் இவ்வுலகம் கூறாது...' என்றெல்லாம் அழுத்தம் திருத்த மாகத் தம் கருத்தை வெளிப்படுத்தியுள்ளார் அவர்.

'இயற்கை'யை இறைவனாக எண்ணியவர் தாயுமானவர் என்பதற்கும் பல எடுத்துக்காட்டுகள் அவர்தம் பாடல்களில் உள்ளன.

'என்றுமுள்ள இயற்கையாகி' [ஆகார...21]

'என்றுமாம் இயற்கை தன்னை' [மண்டல...4]

என்றெல்லாம் இயற்கை வடிவில் கடவுளைக் காணு கின்றார் தாயுமானவர். உலக இயக்கமே இயற்கையை அடிப்படையாகக் கொண்டது எனில், எல்லாவற்றுக்கும் மேலான ஆற்றல் படைத்தது அதுவாகத்தானே இருக்க முடியும் என்ற சிந்தனைவானிலும் சிறகடித்துப் பறந்த சீர்திருத்தப் பறவை தாயுமானவர் எனில் முற்றிலும் உண்மை; வெறும் புகழ்ச்சியில்லை.

## [3]

"...பராபரமும் எந்நாளும் பைங்கிளியும்
பலபாவும் பாடிப்பாடித்
தராதல மானிடர்க் கெல்லாம் தண்ணமிர்தாய்த்
தந்தருளும்..."

தாயுமானவரின் சிந்தனைகள், மனிதஇன மறுமலர்ச் சிக்குத் தூவப்பட்ட நல் வித்துக்களாகும். 'எண்ணரிய பிறவிதனில் மானுடப் பிறவிதான் யாதினும் அரிது

அரிது காண்' என மானிடப் பிறவியின் சிறப்பினைச் சித்தரிக்கின்றார் தாயுமானவர். ஐந்து அறிவோடு ஆறாவது அறிவாகிய பகுத்தறிவு உடைய பிறவி மனிதப்பிறவி என்பதால் அதனைச் சிறந்தது என்கிறார்.

மானுடத்தின்பால் பற்று வைக்கும்போது அங்குக் கற்றவர்கள் கல்லாதவர்கள் என்ற பாகுபாட்டிற்கே இடமில்லை. கற்றவர்களைவிடக் கல்லாதவர்களே மேலானவர்கள் என்ற கருத்துடையவர் தாயுமானவர்.

"கல்லாத பேர்களே நல்லவர்கள்; நல்லவர்கள்;
கற்றும் அறிவில்லாத என்
கர்மத்தை என்சொல்வேன் மதியை என் சொல்லுகேன்"

என்ற பாடல் உணர்த்தும் உண்மை அதுதானே!

பணம் படைத்த செல்வர்களிடம் வேலைக்காரனாகக் குற்றேவல் செய்வதைச் சற்றும் விரும்பாதவர் தாயுமானவர் ஆவார்.

"மிடியிட்ட வாழ்க்கையால் உப்பிட்ட கலம் எனவும்
மெய்யெலாம் உள்ளுடைந்து
விறிட்ட செல்வர்தம் தலைவாயில் வாசமாய்
வேதனைகள் உற........"

[மலைவளர்...4]

என்ற பாடல், குற்றேவல் செய்யும் கொடுமையை நினைந்து குமுறும் எரிமலையாய்க் கொதிக்கும் தாயுமானவரின் கொள்கை வெளிப்பாடாகும். ஒருசாண் வயிற்றுக்காக அன்றோ இக்குற்றேவல் கொடுமை என்ற மனக்கொதிப்பின் பிரதிபலிப்பை இங்கே காணுகின்றோம்.

தன் அழகில் மயங்கித் தன்னை விரும்பிய மீனாட்சியம்மை என்னும் அரசியின் வேண்டுகோளையே அலட்சியப்படுத்தி வெறுத்து ஒதுக்கியவர் தாயுமானவர் என்பர். அதனால், உறவுப்பெண் ஒருத்தியுடன் இல்லற நெறியை ஏற்கும் சூழ்நிலை உருவாக்கப்பட்டு, ஒரு மகனுக்கும் தந்தையான தாயுமானவர், மனைவி இறந்த பின் மறுமணங்கொள்ள விரும்பாமல் முழுத்துறவு நிலையை மேற்கொண்டு,

"பொன்னை மாதரை பூமியை நாடிடேன்"

என்னும் வெறுப்புத்துறவில் விருப்புக்கொண்டவர் ஆகின்றார்.

கொலை, களவு, கள், காமம், கோபம் ஆகிய ஐந்தையும் விட்டொழித்து நல்லொழுக்க வழியில் நடைபோட வேண்டும் என்ற நாட்டம் மிக்கவர் அவர் என்பதனை,

"கொலை களவு கட்காமம் கோபம் விட்டாலன்றோ
மலையிலக்கா மின்னருள்தான் வாய்க்கும்..."
[பராபரக்...288]

என்ற வரிகள் நமக்குத் தெரிவிக்கின்றன.

எல்லா உயிரையும் தன்னுயிர்போல் எண்ணி, அவற்றிற்கு நன்மை செய்தலே எல்லாவற்றுக்கும் மேலான நற்செயல் என்ற கொள்கை உடையவர் அவர்.

"எவ்வுயிர்த் திரளும் உலகின் என்னுயிர்
எனக் குழைந்து உருகின் நன்மையாம்"
[சிற்சுகோதயம், 8]

பிற உயிர்களின்மேல் இரக்கங்காட்டும் அன்பு உள்ளம் உடையவர்களுக்குக் குற்றேவல் செய்ய விரும்பும் உயர்குணம், தாயுமானவரின் தனிக் குணமாகும். செல்

வந்தர்களுக்கு ஏவல்செய்ய விரும்பாத அவர் சிந்தை, உயிர்களுக்கு இரங்கும் உத்தமர்களுக்கு ஏவல் செய்யத் துடிக்கிறது எனின், அன்னாரின் உயர்ந்த நோக்கத்தை என்னென்று போற்றுவது?

அதனாற்றான்,

"அன்பர்பணி செய்யஎனை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந்து எய்தும் பராபரமே"

என்ற கண்ணிமூலம், இன்பநிலை அன்பர் பணியால் தான் கிட்டும் என்ற கருத்தினை வெளிப்படுத்துகின்றார். அந்த இன்பநிலையும் தனக்குமட்டும் கிட்டினால் போதாது; இவ்வுலகில் உள்ள எல்லாருக்கும் கிட்ட வேண்டும் என்ற பரந்த மனப்பான்மை உடையவராகத் தாயுமானவர் திகழ்கின்றார். அன்னாரது பாடல்கள் அனைத்துக்கும் மகுடம் வைப்பதுபோன்று அமைந்த பாடல் வரிகள் இரண்டு உண்டு. அவையே,

"எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன்று அறியேன் பராபரமே"

[பராபரக்...221]

என்பனவயாகும். தாயுமானவப் பெருந்தகையின் பரந்த உள்ளத்தையும் விரிந்த சிந்தையையும் படம் பிடித்துக் காட்டும் வைர வரிகள் இவைகளாகும். 'யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற புறநானூற்று வரி பண்டைத் தமிழரின் பரந்த உள்ளத்தின் வெளிப்பாடு என்கின்றோம். எல்லாரும் இன்புற்றிருக்க நினைக்கும் தாயுமானவரின் நெஞ்சம், பைந் தமிழ்ப் பண்பாட்டின் பிரதிபலிப்பாய் விளங்கும் விரிந்த நெஞ்சம் எனலாம்.

சித்தர் கணம் எட்டாம் பாட்டில் அவர் சித்தரிக்கும் கருத்துகளில் தனது விரிந்த நெஞ்சத்தின் விருப்பத்தினை வெளிப்படுத்தியுள்ளார். 'இத் தமிழைச் சொன்னவன் யாவன்' எனக் கேட்டால், அதற்கு விடையாக, 'இத் தமிழைச் சொன்னவன் சிறிது சாந்தகுணம் உடையவன்' எனக் கூறுவீர்களாயின் அப்புகழ் மொழிகளைக் கேட்டு மட்டற்ற மகிழ்ச்சி அடைவேன். அந்நாள் எந்நாளோ?' என்று ஏக்கத்துடன் தன் இதயவேட்கையினைப் புலப்படுத்துகின்றார்.

"............இத்தமிழையே
சொன்னவன் யாவன்...
நெறியே படித்தீர்
சொல்லும் என...
சொன்ன அவையிற் சிறிது
தோய்ந்த 'குண சாந்தன்' எனவே
மின்னல் பெறவே சொல்ல
அச்சொல் கேட்டு அடிமை மனம்
விகசிப்பது எந்த நாளோ?

எனப் படிப்போர் நெஞ்சம் பாகாய் உருகும் வண்ணம் பாடல்கள் புனைந்துள்ள தாயுமானவரின் பாட்டுத் திறன் பாராட்டத்தக்கதாகும். அன்னாரின் பாடல்களில் காணப்படும் கருத்துநலன் போற்றத்தக்கதாகும். தம் முயிர்போல் எவ்வுயிரையும் மதிக்கின்ற மனப்பக்குவம் தரணியோர் அனைவருக்கும் வரவேண்டும் என்ற தணியாத ஆவல் உடைய தாயுமானவரின் சிந்தனைகள் என்றும் நமது நெஞ்சில் நிறைந்துநின்று நிலைத்திருக்கும் ஆற்றல் படைத்தவை என்பதில் சிறிதும் ஐயமில்லை.

# 9

# கன்னித் தமிழ் வளர்த்த காலடுவெல் பெருமகன்*

தமிழ்நாட்டில் கிறித்தவ மதத்தைப் பரப்பவந் ஐரோப்பியப் பாதிரிமார்களால் தமிழ்மொழி அடைந்த வளர்ச்சி குறிப்பிடத்தக்கதாகும். அன்னை மொழியின் அருமை பெருமைகளை அறியாதிருந்த தமிழர்தம் விழிமலர்களைத்திறந்து ஒளிமணம் கமழச் செய்தோர் அவர்களே ஆவர். தம் மதத்தைப் பரப்புவதற்காகத் தமிழைக் கற்ற அப்பாதிரியார்களைக் காந்தம்போல கவர்ந்துஇழுத்துத் தன் வயப்படுத்திக்கொண்ட பெருமை தமிழ்மொழிக்கே உண்டு. மதத்தை வளர்க்கத் தமிழைக் கற்றவர்கள், தம்மை மறந்து தமிழையும் வுளர்க்கத் தலைப்பட்டார்கள். உரைநடை நூல்கள் பலவற்றை உருவாக்கித் தந்த தத்துவபோதக சுவாமிகள், அச்சுப் புத்தகம் கொணர்ந்த சீகன்பால்கு பாதிரியார், 'சதுரகராதி' தந்த வீரமாமுனிவர், அரிய பல தமிழ் நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து எழுதிய போப் பாதிரியார், 'திராவிட மொழிகளின் ஒப்பிலக் கணம்' கண்ட கால்டுவெல் போன்றோரைத் தமிழுலகம் என்றும் மறவாது போற்றுமன்றோ!

பைந்தமிழை வ்ளர்த்த பாதிரியார்களுள் குறிப்பிடத் தக்கவராகத் திகழும் ராபர்ட் கால்டுவெல் அயர்லாந்து

---

* 26-2-80 அன்று இரவு 9.30 மணிக்குச் சென்னை வானொலியில் ஒலி பரப்பானது.

நாட்டில் பிறந்தவர். அந்நாட்டில் கிளாடி என்னும் ஆற்றங்கரைச் சிற்றூரைத் தம் பிறப்பிடமாகக் கொண்டாலும், தமிழ்நாட்டில் பொருனைநதி பாயும் திருநெல்வேலிச் சீமையில் வெம்மை மிகுந்த செம்மண் தேரியில் அமைந்த இடையன்குடியைத் தம் இருப்பிட மாகக்கொண்டு மதப்பணியும் தமிழ்ப் பணியும் புரிந்த மாபெரும் தொண்டரும் மாமேதையும் அவராவார். அவ்வூரைச் சுற்றி வாழ்ந்த பிற்படுத்தப்பட்ட சமூக மக்களின் காவல் தெய்வமாக வாழ்ந்துவந்த பெருந்தகை யாளரே, கால்டுவெல் பாதிரியார்.

ஆங்கிலக் கல்வியின்மூலமே கிறித்தவ சமயத்தைப் பரப்ப இயலும் என்போரின் கூற்றுக்கு மாறாக, 'சாமான்ய' மக்களின் உள்ளங்களைத் தொடவேண்டு மெனில் தாய்மொழி வழியாகத்தான் கிறித்தவ சமயக்கோட்பாடுகள் பரப்பப்படவேண்டும் என்று அழுத்தந்திருத்தமாகக் கூறியவர், அறிஞர் கால்டுவெல். சிற்றூர்களில் வாழும் ஒடுக்கப்பட்ட மக்கள் மத்தியில் அன்னார்தம் தாய்மொழியாம் தமிழ்மொழியே சாலச் சிறந்த சமயத்தைப் பரப்பும் சாதனமாகத் திகழும் என்று கூறியவர் அவர். இம் முறையில் கிறித்தவ சமயத்தைப் பரப்பிய காரணத்தால்தான், இடையன் குடியைச் சார்ந்த சுற்றுவட்டாரத்தில் இவர் வருவதற்கு முன்பு ஆயிரமாக இருந்த கிறித்தவர்களின் எண்ணிக்கை, இவர் வந்து தொண்டு செய்தபின் இலட்சமாகப் பல்கிப் பெருகியது. இம் முயற்சியில் இவர்தம் அன்புத் துணைவியார் எலிசா அம்மையாரும் பெருந்துணை புரிந்தார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

கால்டுவெல் அறிஞரின் தலையாய தமிழ்ப்பணி யாகக் கருதப்படுவது அவர்தம் 'திராவிடமொழிகளின் ஒப்பிலக்கணம்' என்னும் அரிய ஆராய்ச்சி நூலாகும்.

1856-ஆம் ஆண்டு வெளிவந்த அந்நூல்தான், மேலை நாடுகளில் கால்டுவெல் அறிஞரின் புகழ் ஓங்குவதற்குக் காரணமாக அமைந்தது. கிளாஸ்கோ பல்கலைக் கழகத்தில் மாணவராக இருக்கும்போதே ஒப்பிலக் கணத்தின் மூலமாக மொழித்திறம் உணரும் முறைமை யைக் கால்டுவெல் அறிந்திருந்தார். அவ் ஒப்பிலக்கண உணர்வினைக் கால்டுவெல் உள்ளத்தில் பசுமரத்தாணி போல் பதியவைத்தவர் சர் டேனியல் சேண்ட்ஃபோர்டு என்னும் கிரீக்கு மொழிப் பேராசிரியர் ஆவார்.

திராவிட மொழிகள் அனைத்தும் ஓர் இனத்தைச் சேர்ந்தவை என்னும் உண்மையை முதன்முதலாக உலகுக்கு உணர்த்திய பெருமை கால்டுவெல் அறிஞரையே சாரும். அதனால் 'திராவிட மொழிநூலின் தந்தை' என்றே அன்னார் பாராட்டப் பெறுகின்றார்.

தமிழ் மொழியை மிகவும் மதித்துப் போற்றியவர் கால்டுவெல் அறிஞர். "திராவிட மொழியினங்களுள் மிகவும் தொன்மை வாய்ந்த திருந்தியமொழி தமிழே யாம். அது சொல்வளமிகுந்தது...இதனால் தமிழுக்குத் தலைமை இடம் அளிக்கப்பட்டது" என்று அவர் கூறும் கருத்து, அன்னார்தம் உள்ளத்தின் வெளிப்பாடாக அமைந்திருக்கின்றதன்றோ? ஏனைய திராவிட மொழி களான தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு ஆகியவை வடமொழியின் துணையின்றி வாழமுடியாது என்ற நிலைமைக்கு வந்துவிட்டன. ஆனால், தமிழ் மொழியோ வடமொழியின் துணையின்றியே வளமுடன் வாழும் வல்லமைபெற்றுத் திகழ்கிறது என்னும் கருத்தினைத் 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' என்னும் தம் நூல் மூலம் வலியுறுத்திக் கூறுகின்றார் அவர். மொழியியல் துறையில் புதிய ஆராய்ச்சி

நெறியினைப் புகுத்திய கால்டுவெல் அறிஞருக்குக் கிளாஸ்கோ பல்கலைக்கழகம் 'டாக்டர்' பட்டம் வழங்கிச் சிறப்பித்தது எனின், அன்னார்தம் ஆராய்ச்சித் திறனுக்கு வேறு உரைகல்லும் வேண்டுமோ?

தமிழ்நாட்டின் தொன்மையினைத் தக்க ஆதாரங் களுடன் நிலைநிறுத்த நினைத்து, அதற்கான ஆராய்ச்சிப் பணியிலும் கால்டுவெல் அறிஞர் ஈடுபட்டார். 'துகி' என்னும் ஈப்ருமொழிச் சொல், 'தோகை' என்னும் தமிழ்ச் சொல்லின் சிதைவென்றும், 'அருசா' என்னும் கிரீக்கு மொழிச்சொல் 'அரிசி' என்னும் தமிழ்ச் சொல்லின் சிதைவென்றும், உலகுக்கு அறிவித்த பெருமை கால்டுவெல் அறிஞரையே சாரும்.. 'தமிழர்' பற்றிய கால்டுவெல் அறிஞரின் கருத்தும் அறியத் தக்கதாகும். "தமிழர்களைக் கீழை நாட்டுக் கிரேக்கர்கள் அல்லது ஸ்காட்சுகள் என்று கூறலாம். இந்துக்களுக்குள்ளேயே குறைந்த அளவு குருட்டுநம்பிக்கை கொண்டவர்கள் தமிழர்களேயாம். பொருளீட்டும் பெருமுயற்சியும் வாய்ந்தவர்கள் தமிழர்களே!" என்னும் கால்டுவெல் பாதிரியாரின் மதிப்பீடு நம்மை மெய்மறக்க செய்கின்ற தன்றோ?

கால்டுவெல் அறிஞரால் ஆங்கிலத்தில் எழுதப்பட்ட "திருநெல்வேலிச் சீமைச் சரித்திரம்" என்னும் நூல் அன்னார்தம் வரலாற்று ஆர்வத்தினை இவ்வையத்திற்கு எடுத்துக்காட்டுகின்றது. அவர் இயற்றிய தமிழ் நூல் களான 'நற்கருணைத் தியானமாலை' 1853-ஆம் ஆண்டி லும், 'தாமரைத் தடாகம்' 1871-ஆம் ஆண்டிலும் வெளிவந்தன. மேலும், 'ஞானஸ்நானம்', 'நற்கருணை' என்னும் இருபெருங் கட்டுரைகளையும் தமிழில் எழுதி யிருக்கின்றார். தென்னாட்டில் பணிபுரிந்த வேத

விளக்கச் சங்கத்தின் வரலாற்றைத் தொகுத்தும் நூலாக்கி வெளியிட்டுள்ளார். கிறித்துநாதரை வழிபடுவதற்காக அமைந்த 'பிரார்த்தனை நூலைத்' (The Prayer Book) திருத்தி அமைக்கும் பெரும்பணியில் ஈடுபட்ட அறுவர் குழுவில் ஒருவராக இருந்து. சீரிய முறையில் அவ் வழிபாட்டுநூல் அமையத் துணைபுரிந்தார். இடையன்குடி வட்டத்தில் வாழ்ந்த மிகவும் பிற்படுத்தப்பட்ட பெரும்பான்மைச் சமூக மக்களின் வாழ்க்கை முறைகளை மையமாக வைத்து ஆங்கிலத்தில் ஒரு சிறு நூல் எழுதி வெளியிட்டுள்ளார். உயர்சாதிக்காரர்களால் இழிவாக நடத்தப்பட்ட அச் சாமான்ய மக்கள் தம் வேதனைக்குரலின் வெளிப்பாடாக அந்நூலை அமைத்து, அன்னாரின் துன்பத்தைத் துடைக்க வழி கோலுகிறார் கால்டுவெல் அறிஞர்.

இங்ஙனம், பிற்படுத்தப்பட்ட மக்களுக்காகக் குரல் கொடுத்த குணாளராகத்திகழ்ந்த கால்டுவெல் அறிஞரின் அறிவாற்றலையும், புகழ் மேம்பாட்டையும் கண்டு பொறாமைகொண்ட உள்ளத்தினர் சிலர், அவரைப் பற்றிப் புறங்கூறிப் பொய்த்து உயிர்வாழத் தலைப்பட்டனர். ஒரு முறை நீலகிரி மலையில் ஒரு மாதம் தங்கியிருந்தபோது, ஒரு பெண்ணோடு தொடர்பு கொண்டிருந்தார் என்றும், திருமணத்திற்கு நாளும் குறித்து விட்டார் என்றும், திருமணமே செய்து கொண்டார் என்றும் பலவாறு கதைகட்டி விட்டனர் ஒரு கூட்டத்தினர். தன்னைக் காண வரும் மங்கையரைத் தங்கையராகக் கருதும் தன்மை கொண்டவர்தான் கால்டுவெல் அறிஞர் என்பதை நன்கு அறிந்திருந்தும், வேண்டுமென்றே பொய் மூட்டைகளை அவிழ்த்து விடலாயினர். அதன் மூலம் அன்னார்தம் பெருமையை—பெரும்புகழைக்

குலைத்துவிடலாம் எனக் கனவு கண்டனர் அவர்கள். அவர்களால் வானத்தைப் பார்த்துக் குரைக்கத்தான் முடிந்தது. கால்டுவெல் பாதிரியாரோ, வண்ணநிலவாகப் புகழ்வானில் பவனி வந்தார். அப் பொய்யர்களை யார் என்று அறிந்த பின்னர், அன்னார் நாணும் வண்ணம் பல உதவிகளைச் செய்த நல்லோராக, உயர்ந்த பண்பினை வெளிப்படுத்திக் காட்டியவர் கால்டுவெல் அறிஞர்.

சமயத் தொண்டராக, ஆராய்ச்சி அறிஞராக, மொழி நூல் வல்லுநராக, தமிழ் வளர்த்த சான்றோராக, பகைவருக்கு அருளும் பண்பாளராக விளங்கிய கால்டுவெல் பெருமகனார், 1891 -ஆம் ஆண்டு ஆகஸ்டு 28 - ஆம் நாள் இவ்வுலக வாழ்வை முடித்துக் கொண்டார். ஐம்பதாண்டுகளுக்கும் மேலாகச் சீரிய தொண்டுகள் பல புரிந்த இச் செந்தமிழ் மண்ணிலேயே தான் கல்லறை கொள்ளவேண்டும் என்ற தன் விருப்பத்தை முன்பே வெளியிட்டிருந்தார், அதன்படி, செம்மண்தேரிசூழ்ந்த இடையன்குடி மண்ணில் அன்னார் தம் உடல் நல்லடக்கம் செய்யப்பட்டது. வெளிநாட்டிலிருந்து கிறித்தவ சமயத்தைப் பரப்புவதற்காகத் தமிழகத்திற்கு வருகை தந்திருப்பினும், தமிழர் மத்தியில் தமிழராக வாழ்ந்த பெருந்தகையாளராகவே தமிழுலகம் கால்டுவெல் அறிஞரைக் கருதுகிறது. சமயப் பணியையும் தமிழ்ப் பணியையும் இரு கண்கள் எனக் கருதி வாழ்ந்த கால்டுவெல் பெருமகனாரின் புகழ் என்றும் நம் நெஞ்சில் நின்று நிலவுவதாக!

10

## பாரதி - பாரதிதாசன் சிந்தனைப் பூக்கள் *

உறவுக்கும் உரிமைக்கும் குரல்கொடுக்கும் உயர்ந்த சிந்தனையே, ஒற்றுமைக்கும் ஒருமைக்கும் வழிவகுக்கும் உரத்த சிந்தனையாகும்.

விந்தியத்தை மையமாகக்கொண்ட இந்தியத் திருநாட்டில் வாழுகின்ற எழுபதுகோடி மக்களில் குலத்தால் தாழ்ந்தவர் யாருமில்லை; பிறப்பால் உயர்ந்தவர் எவருமில்லை. எல்லாருமே சரிநிகர் சமானமாக வாழும் இம்மண்ணின் மைந்தர்தாம், அதில் எள்முனையளவும் ஐயமில்லை.

பாகுபாடுகள் இருக்கின்றனவே எனில், அவை பாதியில் வந்தவையே; ஆதியில் இருந்தவை அல்ல. அப்பேதம் எனும் பீதியே, சாதி எனும் பெயரில் மக்களைப் பிரித்து வைத்துச் சதிராட்டம் போடுகிறது.

படியாதவர்கள் மத்தியில் மட்டும்தான் அது வேரூன்றி இருப்பதாக எண்ணவேண்டாம். படித்தவர்கள் மத்தியிலும், அது கிளைத்துத் தழைத்து விருட்சமாகவளர்ந்து வானோங்கி நிற்கத்தான் செய்கிறது.

---

* *19, 20, 21-4-86* ஆகிய நாட்களில் மாலை 6-05 மணிக்கு 'ஒன்று நமது சிந்தனை' வரிசையில் சென்னை வானொலியில் ஒலிபரப்பானவை.

இத்தகைய பிளவுச் சிந்தனைக்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்கவேண்டுமாயின், 'ஒன்று நமது சிந்தனை' எனும் தாரகமந்திரம் ஓங்கி ஒலிக்கவேண்டும்.

கொட்டிவைத்த குப்பை கூழங்களோ, காற்றடித்தவுடன் நாலாபக்கமும் சிதறிப் பறக்கின்றன.

குவித்து வைத்த கோலக்கற்களோ, ஈடுகொடுத்து இணைந்தே கிடக்கின்றன.

உயர்வு தாழ்வு மண்டிக்கிடக்கும் மனங்களோ, குப்பை கூழங்களின் கொள்கலன்கள்,

ஒற்றுமையைக் குலைக்க முனையும் பிளவுக் காற்றுக்கு முன்னால் அவை பறந்துபோவது திண்ணம்.

'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' என எண்ணும் இதயங்களோ, வைரமணிக்கற்களின் வைப்பிடங்கள்; அத்தகைய இதயங்களில்தான் 'எல்லோரும் ஓர்குலம் எல்லோரும் ஓரினம் எல்லாரும் இந்நாட்டின் மன்னர்' என்னும் ஒன்றிய சிந்தனை ஒளிவிட்டுப் பிரகாசிக்கும்.

நெஞ்சத்தளவில் நஞ்சினை வைத்து, உதட்டளவில் உறவை வைத்துப் பழகுவதனால் மட்டுமே உயர்வு தாழ்வு நீங்கிவிடாது. உயர்வு தாழ்வு அகலவேண்டுமெனில் உண்மையான சமதர்மச் சிந்தனை உள்ளத்தில் பூத்துக் குலுங்கவேண்டும்.

'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்'

என்னும் குறள், நமக்கு வழங்கும் சிந்தனையும் அதுதான்.

ஒரே தாய் வயிற்றில் பிறந்த சகோதரர்களுள், ஒருவன் மருத்துவனாகிறான்: மற்றொருவன்

வழக்கறிஞராகிறான்; மற்றும் ஒருவன் ஆசிரியனாகிறான். அவரவர் செய்கின்ற தொழிலால் அவர்கள் வேறுபட்டு நிற்கின்றனர். அவ்வளவே! இங்ஙனம், செய்கின்ற தொழிலால் அவர்களுள் வேற்றுமை தோன்றுமே தவிர, பிறப்பால் வேற்றுமை தோன்ற இடமே இல்லை.

நம் உடம்பிலுள்ள உறுப்புகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பயன்நோக்கி உள்ளன. ஒன்று மற்றொன்றைத் தாழ்வாகக் கருதினால் உடல் இயக்கமே தடைப்பட்டு விடும்.

மானுடர்கள் எனும் அங்கங்களிலும் உயர்வு தாழ்வு என்ற எண்ணத்திற்கு இடமில்லை. அதனால்தான் கவிமணி பாடுகிறார்:

"எவர் உடம்பிற்கும் சிவப்பே ரத்த நிறமப்பா
எவர் விழிநீர்க்கும் உவர்ப்பே இயற்கைக் குணமப்பா
பிறப்பினால் எவர்க்கும் பெருமை வாராதப்பா
சிறப்புவேண்டுமெனில் நல்ல செய்கை வேண்டுமப்பா"

ஒருவனுக்குச் சிறப்பு வருகிறது எனில், அது பிறப்பினால் வருவதல்ல; நல்ல செய்கையினால் வருவதாகும். இந்தச் சீரிய சிந்தனையை நம் சிந்தையிற் கொள்வோமாயின், பிறப்பினால் உயர்வு தாழ்வு பேசும் பேதைமை நம்மை விட்டு நீங்கும் என்பது உறுதி.

"இத், தேசத்தினர்கள் ஓர்தாய்
தந்திடு சேய்கள்
நேசத்தாலே நாமெல்லோரும்
ஒன்றாய் நின்றால்
நிறைவாழ்வு அடைவோம்
சலியா வயிரக் குன்றாய்'

என்னும் பாவேந்தர் பாரதிதாசன் வாக்குக்கிணங்க நாம் ஒன்றிய சிந்தனையோடு ஒன்றுபட்டு நின்று, உயர்வாழ்வு வாழ்வோம்.

சாதியின் பேரால், சமயத்தின் பேரால் எவ்விதக் கலகங்களுக்கும் இடமின்றி, அமைதி தவழும் பூங்காவாக நமது தாயகம் திகழுமாக! ஒன்று நமது சிந்தனை என்னும் உணர்வோடு நாம் வாழ்வோமாக!

[2]

மதச்சார்பற்ற நாடு, நமது இந்தியத் திருநாடு. இங்குப் பல்வேறு மதத்தைச் சார்ந்தவர்கள் உள்ளனர். ஆயினும் அனைவரும் இம் மண்ணுக்கு உரியவர்களே; உற்ற சகோதரர்களே!

மதத்தால் நாம் வேறுபட்டிருந்தாலும், நாட்டால் ஒன்றுபட்டு வாழ்பவர்கள். வேற்றுமையில் ஒற்றுமை காண்பதே அறிவுடைமை. அதுவே நம் நாட்டின் புகழுடைமை.

இவ்வெண்ணம் அனைவரின் சிந்தையிலும் நீக்கமற நிறைந்திருக்கவேண்டும். அதுவே ஒன்றுபட்ட சிந்தனையை வளர்க்க உதவும்.

நாம் பல்வேறு சட்டைகள் அணிந்து கொள்கிறோமே. எதற்காக? உடம்பை மறைப்பதற்காக! சட்டைகள் பல்வேறு வகையில் பல்வேறு வண்ணத்தில் அமைந்திருக்கலாம். ஆயினும் அவற்றை அணியும் உடம்புகள் அனைத்துமே மானிட உடம்புகள்தாம்.

ஆம்! மதங்களும் சட்டைகள் போன்றவைதாம். அச் சட்டைகளோடு இங்கு வாழும் மனிதர்கள் அனைவரும், இம் மண்ணுக்கு உரியவர்களே. மதங்கள் எனும்

சட்டைகள் வேறாக இருக்கலாம். அவற்றை அணிந்துள்ள மனிதர்கள் யாவரும் சகோதரர்களே.

இந்தச் சிந்தனைப்பூ எல்லோர் இதயங்களிலும் பூக்குமானால், அங்கே வாயடிக்கும் கையடிக்கும் இடமே இல்லை; ஒற்றுமை மணங்கமழத் தடையும் இல்லை.

இச் சிந்தனை மணங்கமழும் பாவேந்தர் பாடலைச் சற்று நினைவுபடுத்திக் கொள்வோமா?

"மதங்கள் மக்களின் மாற்றுச் சட்டைகள்
இந்நில மக்கள், அவ்வெழிற் சட்டையின்
உட்புறத் துள்ள மனிதரைக் காண்க:
அந்த மனிதர் இந்தப் பெருநிலம்
ஈன்ற பிள்ளைகள் என்னும் எண்ணம்
அறிந்து பயனிலை, உணர்ந்தால் ஒற்றுமை
நிலைபெறும்; கலகம் அறவே நீங்கும்:
பன்மதம் சேர்ந்த பல்கோடி மக்களும்
நாங்கள் ஒன்றுபட்டோமென்று நவின்றால்
மதங்களின் தலைவர் விரைந்து வந்து
பிரிந்தி ருங்கள் என்றா பேசுவர்?
அவர்கள் அருள்உள்ளம் கொண்டவர் அல்லவோ?"

ஆம்! மதங்களின் தலைவர்களும் அருள்உள்ளம் கொண்டவர்கள்தாமே. மக்களே நாங்கள் ஒன்றுபடு கிறோம் என்று முன்வரும்போது, மதங்களின் தலைவர் கள் குறுக்கே வந்து தடுக்கவா போகிறார்கள்? தடுக்கக் கூடாது என்பதை எவ்வளவு நயமாகக் கூறுகிறார் கவிஞர்!

பல்வேறு மதங்களைச் சார்ந்தவர்களும், இப்பெரு நிலம் பெற்றெடுத்த பிள்ளைகளே. இதனை அறிந்து கொண்டால் மட்டும் போதாதாம். உணர்ந்து

கொண்டால்தான் ஒற்றுமை நிலைக்குமாம். உண்மை தானே! மதக் கலங்கள் அறவே நீங்க இதைவிடச் சிறந்த மார்க்கம் வேறு உண்டா?

இத்தகைய ஒன்றிய சிந்தனையுடன் செயல்படும் போது, அனைவரும் இந்தியத் தாய் ஈன்றெடுத்த செல்வங்களே என்னும் ஒற்றுமை உணர்வே மேலோங்கி நிற்கும். இச் சகோதர உணர்வு அனைவரின் சிந்தையிலும் செழிக்குமானால், சண்டைகள் நீங்கிடும்; சமாதானம் ஓங்கிடும்!

பல்வேறு சமயங்களும், ஒரே பரம்பொருளை அடிப் படையாகக் கொண்டவையே என்னும் கருத்துக் கொண் டவர் பாரதியார் ஆவார்.

"ஆத்தி சூடி இளம்பிறை அணிந்து,
மோனத் திருக்கும் முழுவெண் மேனியான்,
கருநிறங் கொண்டுபாற் கடல்மிசைக் கிடப்போன்,
மகமது நபிக்கு மறையருள் புரிந்தோன்,
ஏசுவின் தந்தை எனப்பல மதத்தினர்
உருவகத் தாலே உணர்ந்துஉண ராது
பலவகை யாகப் பரவிடும் பரம்பொருள்
ஒன்றே"

என்னும் பாரதியின் பாடல் தெளிவுறுத்தும் உண்மை என்ன? சிவனாக இருந்தாலும், திருமாலாக இருந்தா லும், மகமது நபிக்கு மறையருள் புரிந்தோனாக இருந்தாலும், ஏசுவின் தந்தையாக இருந்தாலும் எல்லாக் கடவுளருள்ளும் ஊடுருவிநிற்கும் பரம்பொருள் ஒன்றே என்பதுதான். கடவுளை நம்புவோர் உள்ளங் களில் எல்லாம் ஒளிவிட்டுத்திகழ வேண்டிய சிந்தனைச் சுடர் இதுவாகும்.

சமயம் காரணமாகச் சண்டையிடுதல், அவரவர் சமயக் கொள்கைக்கே விரோதமானது. மக்களை ஒன்று

படுத்தி உயர்த்திடத்தான் மதங்கள் தோன்றியதாகக் கூறுவர்; பிளவுபடுத்திப் பிரித்திட அல்ல.

இதனைச் சிந்தையில் நிறுத்திச் செயல்பட வேண்டியதே நம் அனைவரின் தலையாய கடமையாகும். அப்போதுதான், இமயத்திலிருப்பவனுக்கு ஒன்று நேர்ந்தது எனில், குமரியில் இருப்பவனும் உதவுவதற்கு விரைந்து ஓடுவான். பாவேந்தர் பாடுவதுபோல,

''இமயச் சாரலில் ஒருவன் இருமினான்
குமரி வாழ்பவன் மருந்துகொண்டு ஓடினான்
ஒருவர்க்கு வந்தது அனைவர்க்கும் என்ற
மனப்பாங்கு வளர்ந்தது வேண்டிய மட்டும்''

என்னும் ஒன்றிய சிந்தனையோடு, நாட்டு ஒற்றுமை ஓங்கிடவேண்டும். ஒருவர்க்கு வந்தது அனைவர்க்கும் எனும் மனப்பாங்கு, பாவேந்தர் கூறுவதுபோல, வேண்டிய மட்டும் வளரவேண்டும்.

''எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி
இருந்ததும் இந்நாடே-அதன்
முந்தையர் ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்து
முடிந்ததும் இந்நாடே - அவர்
சிந்தையில் ஆயிரம் எண்ணங்கள் வளர்ந்து
சிறந்ததும் இந்நாடே!''

என்னும் பாரதியின் பாடல். நம் சிந்தையில் என்றும் நின்று சிறப்பதாக! 'ஒன்று நமது சிந்தனை' என்னும் உணர்வு செழிப்பதாக!

## [3]

அறிவியலின் வேகமான முன்னேற்றத்தினால் உலகத்தின் பரப்பளவே மிகவும் சுருங்கிவிட்டது எனலாம்.

உலகத்தின் எந்த மூலையில் எது நிகழ்ந்தாலும்' உடனுக்குடன் உலகம் முழுமையும் தெரியக்கூடிய அளவுக்கு, அறிவியலின் சாதனை அமைந்துள்ளது.

இந்நிலையில், மனிதனின் சிந்தனையோ, உலக ஒருமையை நோக்கி விரைந்து கொண்டிருக்கிறது. ஒன்றே உலகம் என்னும் ஒற்றுமைக் கோட்பாடு வேகமாக வளர்ந்து வருகிறது.

"தன்பெண்டு தன்பிள்ளை சோறு வீடு
சம்பாத்தியம் இவையுண்டு தானுண்டு"

என்னும் சின்னதொரு கடுகு உள்ளத்திலிருந்து,

"தூய உள்ளம் அன்புஉள்ளம் பெரிய உள்ளம்
தொல்லுலக மக்களெலாம் ஒன்றே என்னும் தாயுள்ளம்"

தனைநோக்கி மனிதசிந்தனை முன்னேறிச் சென்று கொண்டிருக்கிறது.

'எல்லா மக்களும் ஒன்றே' என்னும் தாயுள்ளம் கொள்ளும்போதுதான், உலகில் தன்னலம் தீரும். தன்னலம் தீரும்போது, சண்டையும் தானாகத் தீர்ந்து விடும்.

மனிதனின் எல்லாத் தீய செயல்களுக்கும் அடிப்படையாய் அமைவது, தன்னலந்தானே. 'நான்', 'எனது, என்னும் செருக்குத்தானே, பிறர் நலத்தை அழிக்கத் தூண்டும் பேயாக ஆட்டம் போடுகிறது.

இந்த உலகம் அழியாமல் நிலைத்து நிற்பதற்குக் காரணம்,

'தமக்கென முயலா நோன்றாள்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே'

என்றுதானே புறநானூற்றுப் புலவனும் பாடுகிறான்.

உலகிற்கு மட்டுமா? எந்த ஒரு நாட்டின் முன்னேற்றத்தையும் நாடுகின்றவர்கள், இத் தன்னலத்தைத் துறந்து, பொதுநலம் பேணும் தூய சிந்தையுடையவர்களாகத் திகழவேண்டும். அப்போதுதான் நாடு செழிக்கும்; சிறக்கும்.

நம் தாய்த்திருநாட்டின் ஏற்றத்தை நாடும் ஒவ்வொருவரும் தன்னலமின்றி உழைக்க வேண்டும்; பொதுநலம் பேணித் தழைக்க வேண்டும்.

ஒவ்வொரு நாட்டினரும் இத்தகைய ஒன்றிய சிந்தனையுடன் செயல்படுவார்களானால், உலக நாடுகள் அனைத்தும் ஒருசேர முன்னேறுமன்றோ!

அப்போது, ஒருநாடு மற்றநாடுகளைத் தாக்கிடும் சூழல் ஏற்படாது. பெரியநாடு சிறியநாடு என்னும் பேதம் தோன்றாது. 'சிறுபான்மை இனத்தினர்' அமைதி ஏதுமின்றித் தத்தளித்துத் தவிக்கும் நிலை தலைதூக்காது. ஓர் இனம், மற்றோர் இனத்தை ஆதிக்கம் செலுத்தி அடிமைகொள்ளும் மனப்போக்கும் மாறும்.

'மானுடம்' எனும் எண்ணமுடன் நமது சிந்தனை விரியுமானால், அங்கே பிளவுக்கு இடமில்லை; பேதமும் இல்லை. இதோ, பாவேந்தர் பாடுகிறார்,

''மனிதரில் நீயுமோர் மனிதன்! மண்ணன்று!
இமைதிற! எழுந்து நன்றாய் எண்ணுவாய்!
தோளை உயர்த்துச் சுடர்முகம் தூக்கு!
..................................
எங்கும் பாரடா இப்புவி மக்களைப்
பாரடா உனது மானிடப் பரப்பைப்
பாரடா உன்னுடன் பிறந்த பட்டாளம்

'என்குலம்' என்றுனைத் தன்னிடம் ஒட்டிய
மக்கட் பெருங்கடல் பார்த்து மகிழ்ச்சிகொள்!
அறிவை விரிவுசெய்! அகண்ட மாக்கு!
விசாலப் பார்வையால் விழுங்கு மக்களை!
அணைந்துகொள்! உன்னைச் சங்கமமாக்கு!
மானிட சமுத்திரம் நான்என்று கூவு!..."

என்று அவர் உணர்ச்சியுடன் பாடும்போது, மனித நேய ஒருமைப்பாட்டுச் சிந்தனை எழுச்சியுடன் வெளிப் படுவதைக் காணலாம். எண்ணத்தால் இதயத்தால் பக்கத்து வீட்டாருடன் இணைந்துநின்று பிணைந்து வாழ்வதில் தொடங்கி, உலகம் முழுமையும் தம்முடன் பிறந்த மக்கள் பெருங்கடல் என்று கண்டு மகிழ்ச்சி அடைவது வரை, எவ்வளவு பெரிய மானிடப்பரப்பை நம் கண்முன் கொண்டு வந்து நிறுத்துகிறார் கவிஞர்!

இங்ஙனம் இம் மானிடப் பரப்பின் பேரெல்லையைக் காட்டும் கவிஞரின் சிந்தனை, 'ஒன்றே உலகம்' என்பதற் குப் பாலம் அமைத்துக் கொடுக்கும் உரத்த சிந்தனை யாகும்.

"ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு—நம்மில்
ஒற்றுமை நீங்கிடின் அனைவர்க்கும் தாழ்வு"

என்னும் எண்ணம், ஆழமாக நம் நெஞ்சில் பதிய வேண்டும். அதுவே நம்மை உயர்த்தும்; நம் நாட்டை உயர்த்தும்; இந் நானிலத்தை உயர்த்தும் என நம்புவோ மாக! அதற்கு நாளும் உழைப்போமாக!!

11

## வாணிதாசன் கவிதை ஓவியங்கள் *

தற்காலத் தமிழ் இலக்கிய வரலாற்றில் புதுவை மாநிலம் பெற்றுள்ள இடம் தனிச்சிறப்பு வாய்ந்த தாகும். நாட்டு விடுதலைக்குப் பாட்டு முழக்கமிட்ட பாரதியாருக்குப் புகலிடம் அளித்த பூமி மட்டுமன்று; சமுதாய எழுச்சிக்கான சண்டமாருதப் பாவடித்த புரட்சிக்கவி பாரதிதாசனுக்குப் பிறப்பிடமாய் அமைந்த பெருமைக்குரிய மண்ணும் அதுவேயாகும். அப்புரட்சிக் குயிலைத் தொடர்ந்து, வாணிதாசன் என்னும் புதுமைக் குயில் கூவியதும் அப்புதுவை மண்ணில்தான்.

அழகின் சிரிப்பைக் காட்டிய ஆசான் பாரதி தாசனுக்கு நிகராக, இயற்கையை 'எழிலோவியமாகக்' கண்டு எழில்விருத்தம் பாடிய புதுமைக் கவிஞர் வாணி தாசன் ஆவார். அவரது கற்பனையில் பூத்த கவிமலர் ஓவியங்கள் என்றென்றும் நம் நெஞ்சைக் கவர்வன; நிலைத்து நிற்பன! அவை கருத்தோவியம் கலந்த சொல்லோவியங்களாகச் சுடர் விடுவன; உயிரோவியங் களாக நின்று நம் ஊனோடும் உயிரோடும் ஒன்றிக் கலப்பன.

இயற்கைக் காட்சிகளை மட்டுமா, எழிலோவியங் களாகத் தீட்டிக் காட்டுகிறார்? அன்று! மக்கள்

---

* 'அமுத சுரபி' தீபாவளி மலரில் (1988) வெளி வந்தது.

வாழ்வோடுபிணைந்த அனைத்தையுமே சொல்லோவியங் களாகத் தீட்டி, நம் கண்முன் கொண்டு வந்து நிறுத்திக் காட்டுவதில் வல்லவராகத் திகழ்கின்றார் அவர்.

* *

'எழிலோவியம்' காட்டும் மலையோவியம் ஒன்றைக் காண்போமா? கவிஞரின் கண்களுக்கு மலைகூட அழகிய மங்கையாகத்தான் தெரிகிறது. ஆம்! பச்சைப் பட்டாடையோடு பாங்குடன் அல்லவா அம் மலை மங்கை காட்சியளிக்கிறாள்! அவள் மார்பில் மாலை கூடச் சூடியிருக்கிறாளே! அது என்ன மாலை! வேறு என்ன? மலைவீழ் அருவியேதான்! மார்பு மலையாகக் காட்சியளிக்கிறது. மலைமேல் தவழும் மேகக் கூட்டமோ, அம் மலைப் பெண்ணாளின் கரிய கூந்த லாம்; பூத்திருக்கும் குறிஞ்சிப் பூக்களே, அம்மங்கையின் கண்களாம்! தேனடையே அவளது இனிக்கும் அதரங் களாம்! இத்தகு அழகிய தோற்றங்கொண்டவளாக அம் மலைப் பெண்ணாளை நம் மனக்கண்முன் உருவகப் படுத்திக் காட்டுகிறார், வாணிதாசன்.

இயற்கை கொஞ்சும் அம் மலைச் சாரலில் குறிஞ்சி நிலத்துக் கோதையர் என்ன செய்து கொண்டிருக்கிறார் களாம் தெரியுமா? ஆலமரத்தின் வீழ்தில் ஏறிக்கொண்டு ஊஞ்சலாடிக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் ஆடுவதைப் பார்த்த மந்தியொன்றோ ஏங்கித் தவிக் கிறதாம். அருகில் உள்ள பாறையின்மேல் அழகிய மயிலொன்றோ நாட்டியமாடிக் களிக்கின்றதாம்.

வாணிதாசன் வடித்த கவி வண்ண ஓவியத்தை நீங்களும்தான் காணுங்களேன்!

"ஆடையோ பசுமைக் காடாம்!
அருவியோ எடுத்த மார்பிற்
சூடிய மாலை! நாற்றந்
தோய்குழல் படியும் மேகம்!
ஈடிலாக் குறிஞ்சிக் கண்கள்
இதழ், உச்சி அடைத்தே னாகும்!
தேடிய மலைப்பெண் ணாளின்
திருமுகம் பாராய் தம்பி!

நாரையின் காலை வெட்டி
நறுக்கிய மணியும், பூத்த
கோரையும், நரியின் பல்லும்
கோத்தணி குறிஞ்சிப் பெண்கள்
சாரலில் தழைத்த ஆலின்
வீழ்தேறி ஊசல் ஆடப்
பார்த் தேங்கும் மந்தி! நீண்ட
பாறைமேல் தோகை ஆடும்!

நாரையின் காலை வெட்டி நறுக்கிய மணி, பூத்த கோரை, நரியின் பல் ஆகியவற்றைக் கோத்து மாலையாக அணிந்திருக்கிறார்களாம், அம் மலை நிலத்து மங்கையர்! அவர்கள் ஊஞ்சலாடும் அக் கோலக் காட்சி, நம் மனக் கண்முன் அப்படியே தோன்றுகின்றதல்லவா?

* * *

கவிஞர்களின் கைவண்ணத்தில் கவினுறச் சித்தரிக்கப்படுவோர் பெண்களே எனலாம். ஆடவர் உள்ளத்தை ஏங்கி ஏங்கித் தவிக்கவைக்கும் ஆற்றலில் பெண்டிரின் பேரழகுக்குப் பெரும்பங்கு உண்டு. அத்தகைய பேரழகுப் பெட்டகமொன்றை, அழகிய சொல்லோவியமாகத் தீட்டி, நம் கண்முன் கொண்டுவந்து நிறுத்திக் காட்டுகிறார் கவிஞர் வாணிதாசன்:

சோலை மரமொன்றின் வேர்மீது தலைவைத்து. தனது மெல்லுடலை நீட்டிப் படுத்திருக்கிறாள் ஒருத்தி, அவள் படுத்துக்கிடக்கும் தோற்றம் எப்படி இருக்கிற தாம்? யாழ் கிடப்பது போல இருக்கிறதாம், மீட்டுவார் இன்றி! அவ்வளவுதானா? தமிழ் நூல் ஒன்று தனியே படிப்பாரின்றிக் கிடப்பது போலவும் தோன்றுகிறதாம். கார்மேகம் காணாத தோகைமயில் போலக் கிடக்கிறா ளாம், அத்துடியிடையாள்! மேலும் தொடர்கிறது, கவிஞரின் வருணனை! அருகில் உள்ள நீர் நிலையில் துள்ளிப்பாயும் கெண்டை மீன்களை நோக்கிக் கெண்டை மீன் போன்ற அவளது விழிப்பார்வை பாய்கிறதாம். அப்படிப் பார்த்துப்பார்த்துச் சலித்துப்போய், இமை களை இறுக மூடியவாறு படுத்திருக்கிறாள், பருவங் கொழிக்கும் உருவங்கொண்ட அப் பைம்பொன் பாவை! எப்படி? கல்லில் செதுக்கிய வண்ணச் சிலை போல! நறுமணங்கமழும் சந்தனக் கிண்ணம் கிடப்பதுபோல! அக்காட்சியைக் கண்ட ஆடவன் எண்ணமோ, எங் கெங்கோ ஓடுகிறது; இறக்கை கட்டிப் பறக்கிறது!

அன்புக் காதலனை ஏங்கவைத்த அக் கன்னி மகளைப் படம் பிடித்துக் காட்டும் கற்பனை ஓவியம் இதோ!

"யார் அவள்? அவளேதான்! யாழ்கிடப்பதைப் போல
தமிழ்நூல் தனியே படிப்பா ரின்றிக்
கிடப்பதைப் போலக் கிடக்கின்றாள் கிள்ளை!
வேர்மேல் தலைவைத்து மெல்லுடலை நீட்டி
நீர்க்கெண்டை நோக்கி விழிக்கெண்டை பாயக்
கிடக்கின்றாள்! கார்காணாத் தோகை கிடப்பதைபோல்!
கண்ணைத் திறக்காது கல்லிற் செதுக்கிவைத்த
வண்ணச் சிலைபோல் என் வாழ்வரசி மரத்தடியில்

எண்ணம் எழுந்தோட விழிபோங்க நறுஞ்சாந்துக்
கிண்ணம் கிடப்பதைப்போல் கிடக்கின்றாள்...''

* * *

'விளக்குப்' பற்றிக் கவிஞர் வாணிதாசன் படைத்திட்ட சொல்லோவியம் ஒன்று, புதிய விளக்கத்தையே நமக்கு அளிப்பதாக அமைகின்றது. கவிஞர் தீட்டிய அக் கவியோவியத்தைக் காண்போமா?

இரவு நேரம்! தனி அறை! மங்கலாக எரியும் விளக்கு! கொம்பினைக் கடைந்து செய்த குளிர்ந்த கட்டில்! அதன்மேல் அமர்ந்திருக்கும் காதல் மணமக்கள் வம்பளந்து கொண்டிருக்கிறார்கள்! அப்போது அங்கு எரிந்து கொண்டிருக்கும் விளக்கு என்ன செய்கிறதாம் தெரியுமா? மணமக்களின் வம்புப் பேச்சை, கம்மலாய் எரிந்து கேட்டு, காதோடே வைத்துக் கொள்கிறதாம்; இம்மியும் வெளிவிடாதாம்! இரகசியத்தைக் காப்பது தானே மேலோரின் செய்கை! அதனைத் தான் அவ் விளக்கும் செய்கிறதாம் விளக்கு 'கம்மலாக' மட்டுமா எரிகிறது? இரகசியம் என்னும் 'கம்மலை'யும் (காதணி) அல்லவா, காதோடே அணிந்து கொள்கிறது! கவிஞர் கையாளும் சிலேடை நயம், நம் சிந்தையைத் தொடுகின்றதன்றோ?

காது கொடுத்துக் கேட்கும் இயல்பு மட்டுமா, விளக்குக்கு உண்டு? குழந்தைகளோடு தனிமையில் உரையாடி மகிழ்தலும் அவ்விளக்கின் தனிஇயல்பாகும். அதோ, அக் கோலக் காட்சி!

குழந்தையை அருகணைத்துப் படுத்துக் கொண்டிருக்கும் ஓர் அன்னை! அம் மழலையின் மேனியைத் தடவிக்கொண்டும், அதன் முதுகில் தட்டிக் கொண்டும்

இருக்கிறாள்! அப்படியே கண்ணயர்ந்து தூங்கி விடுகிறாள். ஆனால், குழந்தையின் கண்களோ, அயர்வதாக இல்லை. தனது கால்களை, முன்னால் தூக்கி வாயால் சப்புகிறது; அங்கிருந்து காணும் விளக்கைக் கண்டு முறைக்கிறது; பின், சிரிக்கிறது! சிறிது நேரத்தில் பேசவும் செய்கிறது. தானாகவா? இல்லை! அவ்விளக்கோடுதான்! அன்னையோ தூங்கி விடுகிறாளாம். தூங்காமல் இருக்கும் குழந்தைக்குத் துணையாக இருந்து அவ் விளக்கோ பேசிக்கொண் டிருக்கிறதாம். நம் கருத்தைக் கவர்த்திழுக்கும் அக் கற்பனை ஓவியம் இதோ:-

"கொம்பினைக் கடைந்து செய்த
குளிர்நிரை கட்டில் மீது
வம்பளந் திருப்பார் காதல்
மணமக்கள்! அவர்கள் பேச்சைக்
கம்மலாய் எரிந்து கேட்டுக்
காதோடே வைத்தி ருப்பாய்!
இம்மியும் வெளிவி டாய்நீ
ஈதன்றோ மேலோர் செய்கை!

தன்னருங் குழவி மேனி
தடவிப், பின் முதுகில் தட்டி
அன்னைகண் அயரும் கண்கள்!
அயராத குழவி, காலை
முன்தூக்கிச் சப்பும்; உன்னை
முறைத்திடும்; சிரிக்கும்; பேசும்!
உன்னிடம் குழவிக் கேற்ற
உரையாடல் உண்டு போலும்!

* * *

கிராமியக் காதலைப் படம் பிடித்துக் காட்டுவதிலும் வல்லவராகத் திகழ்கிறார் வாணிதாசன். அவர்

வாழ்ந்தது சேலியமேடு என்னும் ஒரு குக்கிராமத்தில் தானே! கிராம மக்களின் இயல்பான நடைமுறை வாழ்க்கையைக் கூர்ந்து நோக்கி, தம் மனத்தில் நிரந்தர மாகப் பதியவைத்துக் கொண்டவராயிற்றே அவர்! அதன் வெளிப்பாடு, அவர் கவிதையிலும் தெரியத் தானே செய்யும்? அவர் தீட்டிக் காட்டியுள்ள ஓர் அற்புதமான காதல் ஓவியத்தைக் காண்போமா?

அதோ நாற்று நடும் கறுப்பி! காற்றிலே பறக்கும் உடையை இறுக்கிக் கட்டுகிறாள்! நெற்பயிரைக் கையில் எடுக்கிறாள்! சேற்றிலே புதைந்த அடியைப் பெயர்த்து, நாற்றை நடுகிறாள். நடும்போதே தெம்மாங்குத் தீஞ்சுவையைப் பாய்ச்சுகிறாள். அப்போது அவள் தோற்றம்! அடடா! காற்றில் குலையும் தலை யழகு, கட்டான உடல்; கருநாவல் நிறம்! இத்தகு கோல அழகினைப் பருகிக் களிக்கின்றன, குப்பன் என்னும் இளைஞனின் இரு கண்கள். எப்படி? வெயிலில் திரியும் மான் ஒன்று, ஊற்றுநீரைக் கண்டால் விடுமா? உடனே ஓடிச்சென்று உண்ணுமல்லவா? அதைப் போல அவனது இரு கண்களும் அவள் எழிலைக்கண்டு, அல்ல, உண்டு களிக்கின்றனவாம்.

வேலை முடிந்து அவள் வரட்டும் எனச் சாலையில் காத்துக்கொண்டிருக்கிறான் குப்பன். அவன் உள்ளமோ, காதல் நோயால் தவியாய்த் தவிக்கிறது. அவள் அழகுருவோ, அந்நோயை மேலும் அதிகப்படுத்துகிறது. சேலையுள் விம்மித்தோன்றும் மாதுளை போன்ற அவள் தோள்; செந்நிறம் ஏறிய அந்தப் பல்வரிசை: நூல் போன்ற நுண்ணிய இடை; நெற்றியில் இட்டுள்ள செந்நிறப்பொட்டு; கவர்ந்திழுக்கும் அழகிய காதோலை; ...இத்தகு அவளது அழகுத்தோற்றம், அவன் உடல் நோயை அதிகரிக்காமல் வேறு என்ன செய்யும்?

அப்போது...மாலைக் கதிரவன் மறையத் தொடங்கும் வேளை! அவள் வருவதைப் பார்க்கின்றான். குள்ளவாத்தைப் பழிக்கின்ற கோல நடையோடு அல்லவா வருகின்றாள்? அருகில் செல்கின்றான்; 'சற்று நில்' என்கின்றான்; தன் காதல் விண்ணப்பத்தை அவளிடம் சமர்ப்பித்திடத் தயாராகின்றான். அக் காதல் ஓவியம் இதோ:

''காற்றில் பறக்கும் உடையிறுக்கி—அந்தக்
கறுப்பி எடுத்தனள் நெற்பயிரை;
சேற்றில் புதைந்த அடிபெயர்த்தாள்—தமிழ்த்
தீஞ்சுவை பாய்ச்சினள்; நாற்று நட்டாள்;
காற்றில் குலையும் தலையழகும்—அவள்
கட்டுடல் நாவல் கருநிறமும்
ஊற்றுநீர் கண்ட வெயில் மான்போல்—குப்பன்
உண்டுநின் றான் அவன் கண்ணிரண்டால்!

சேலையுள் விம்மிடு மாதுளைத்தோள்—அவள்
செந்நிறம் ஏறிய பல் வரிசை
நூலிடை, செம்பொட்டுக் காதோலை—உடல்
நோய் செய்யச் சாலையில் காத்திருந்தான்;
மாலைக் கதிரொளி மங்க மங்கக்—குள்ள
வாத்தைப் பழித்தவள் வந்து சேர்ந்தாள்!
'வேலை முடிந்ததா? சற்றுநின்றே—என்றன்!
விண்ணப்பம் கேளடி!' என்றுரைத்தான்!
.........................................''

புதுவை மண்ணில் தோன்றி பாரதி, பாரதிதாசன் பாட்டுப் பாதையில் பீடுநடை போட்ட பெருங்கவிஞர் வாணிதாசன் வடித்துத் தந்துள்ள கவிதை ஓவியங்கள் பலப்பல. அவற்றுள் சிலவே ஈண்டு காட்டப் பெற்றன. அவை கவிஞரேறு வாணிதாசனை ஓரளவு அறிந்து கொள்ள உதவலாம்.

# 12

## தமிழ் இலக்கிய வளர்ச்சியில் புலவர் குழந்தையின் பங்கு*

தமிழ் வளர்த்த தகைமையாளர்களுள், தனக்கென ஒரு தனியிடத்தைப் பெற்றுத் திகழ்பவர் புலவர் குழந்தை. 1972-ஆம் ஆண்டில் செப்டம்பர்த் திங்கள் 22 ஆம் நாள், தமது 66-ஆவது வயதில் அவர் மறைந்தார். ஆம்! தமிழ்த் தாயின் அத் தலைமைக் குழந்தை மறைந்து பதினான்கு ஆண்டுகள் உருண்டோடி விட்டன. அவர் மறைந்தாலும், அவர் விட்டுச் சென்றுள்ள இலக்கியக் கருவூலங்கள் என்றைக்கும் மறையா. நீர்மேல் குமிழிகளா என்ன, அவை நிமிடத்தில் மறைந்து விட? காலா காலத்திற்கும் அவர் புகழை நிலைக்க வைக்கும் கல்மேல் எழுத்தன்றோ, அக் காகிதக் கருவூலங்கள்!

தமிழ் வாழ, தாம் வாழ்ந்த அத் தகைமையாளர் பிறந்தது, இன்றைக்கு 80-ஆண்டுகளுக்கு முன் கொங்கு நாட்டுக் கோவை மாவட்டத்தில் 'ஓலவலசு' என்னும் சிற்றூரில்! மூத்துச்சாமிக் கவுண்டர்—சின்னம்மையார் தம்பதியர்க்கு ஒரே மைந்தராக—அன்புக் குழந்தை யாக; அவர் பிறந்ததும் குழந்தையாக! வாழ்வாங்கு வாழ்ந்து மறைந்ததும், குழந்தையாக! ஆம்! பூவுலகு போற்றும் புலவர் குழந்தையாக!

---

* 13-10-1986 அன்று இரவு 8 மணிக்குச் சென்னைத் தொலைக்காட்சியில் ஆற்றிய இலக்கிய உரை.

யாப்பிலக்கணம் படிக்கத் தொடங்கு முன்னரே, பல இசைப்பாடல்களையும் பாடிய பெருமை இவருக்குண்டு. கன்னியம்மன் சிந்து, வெள்ளக்கோவில் வீரக்குமாரசாமி இரதோற்சவச் சிந்து, வீரக் குமாரசாமி காவடிச் சிந்து, ஆகிய நூல்கள் 1918—1924 ஆகிய கால கட்டங்களில் அவரால் எழுதப்பட்டன.

தொடக்க காலத்தில் அம்மன்மேல் சிந்து பாடிக் கொண்டிருந்த குழந்தையின் உள்ளத்தில், 1925-ஆம் ஆண்டு முதல் அய்யா பெரியார் குடிகொள்ளத் தொடங்கினார். தந்தை பெரியாரால் தொடங்கப் பெற்ற சுயமரியாதை இயக்கம் புலவர் குழந்தையின் நெஞ்சத்தைப் பெரிதும் ஈர்த்தது. அன்று முதல், சுயமரியாதைச் சுடராக ஒளிரத் தொடங்கினார்.

—பள்ளித் தமிழாசிரியராக இருந்து கொண்டே, பெரியாரின் சீடராக,—தன்மானமிக்க தமிழ்க் கவிஞராக, பவானி மாநகரில் பவனி வரலானார்.

—சுயமரியாதை இயக்கப் பெருங்கவிஞரான அவர் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கும் வளமைக்கும் பல்வேறு வகைகளில் பாடுபட்டு உழைத்துள்ளார்.

அவர் எழுதிய கவிதை நூல்சள் பல. அவற்றுள் அவருக்குப் பெரும்புகழை ஈட்டிக்கொடுத்த பெருமை வாய்ந்த நூல் 'இராவண காவிய' மாகும். அயோத்தி வேந்தன் தசரத குமாரன் இராமனை மையமாகக் கொண்டு, கம்பர் இராமகாதை பாடியது போல, தென்னிலங்கைக் கோமான். "ஐயிரண்டு திசைமுகத்தும் தன் புகழை வைத்தோன், குன்றெடுக்கும் பொருந்தோளான், கொடை கொடுக்கும் கையான்" இராவணனை மையமாகக் கொண்டு, இராவண காவியம் பாடியவர் புலவர் குழந்தை ஆவார்.

"பழமைக்குப் பயணச்சீட்டு, புதுமைக்கு நுழைவுச்சீட்டு" என அறிஞர் அண்ணாவாலும "தமிழிலக்கியத்தின் சாறு" என்று கலைஞராலும் பாராட்டப்பெற்ற மாகாவியம் அதுவாகும்.

அம் மாகாவியமாம் இராவண காவியத்தில் புலவர் குழந்தையின் கவித்திறன் சுடர்விட்டுப் பிரகாசிப்பதைக் காணலாம். இராவணன், மண்டோதரியாம் வண்டார் குழலியைக் காணும்போது, புலவர் குழந்தையின் பாடல் களில் துள்ளலோசை துள்ளிக் குதிப்பதைக் காணலாம்:

தண்டாமரை மலரோ? கனி தமிழோ! தமிழகமோ?
உண்டோர்மன முள்ளுறுவே உவக்குந்தெளி தேனோ?
வண்டோகவியோ—வேறெது காணோமென வே-தான்
வண்டார்குழல் என்றேபெயர் வைத்தார்மன மொத்தே!

அடுத்து, அவர் பாடிய கவிதை நூல் "அரசியலரங்கம்." முழுதும் சிந்துப்பாடல்களால் ஆனது. இலக்கியச் சுவைபடத் தமிழக வரலாற்றினை அறிந்து கொள்ள உதவுவது.

பேராசிரியர் சுந்தரம் பிள்ளையின் 'மனோன் மணியம்' போலப் புலவர் குழந்தை பாடிய நாடக நூல் "காமஞ்சரி" என்பதாகும். கதை நலனும் கவிநலனும் ஒருங்கே அமைந்த கவிதை நாடகம் அதுவாகும்.

"புலவர் குழந்தை பாடல்" என்னும் கவிதைத் தொகுப்பு அவரது பாடற் திறனுக்குச் சான்று பகரும் பான்மை படைத்தது. 1931-ல் ஆங்கில ஆட்சியாளர் களால் விடுதலைவீரன் பகத்சிங் தூக்கிவிட்டுக் கொல்லப் பட்டபோது, புலவர் குழந்தை பாடிய உணர்ச்சிமிக்க பாடல்களை இத்தொகுப்பில் காணலாம்.

கவிஞராக மட்டுமல்லாமல், சிறந்த உரையாசிரிய ராகவும் திகழ்ந்தவர் புலவர் குழந்தை ஆவார். 1948-ல்

சென்னையில் நடந்த திருக்குறள் மாநாட்டில், பகுத்தறிவுக்கேற்ப—தமிழ் மரபு பிறழாமல்—திருக்குறளுக்கு உரையெழுதத் தந்தை பெரியார் அவர்களால் ஏற்படுத்தப்பட்ட ஐவர் குழுவில் புலவர் குழந்தையும் ஒருவராவார். மற்றும், தொல்காப்பியப் பொருளதிகாரத்திற்கு இவர் எழுதிய உரை தனிச்சிறப்பு வாய்ந்ததாகும். இவர் எழுதிய "நீதிக்களஞ்சிய உரை"யும் நினைவிற் கொள்ளத் தக்காகும்.

—இவரது வரலாற்றுப் புலமைக்கு எடுத்துக்காட்டாக "கொங்குநாடு", "தீரன் சின்னமலை" "தமிழக வரலாறு" ஆகிய நூல்கள் திகழ்கின்றன.

—இவரது ஆராய்ச்சித் திறனுக்கு எடுத்துக்காட்டாக, தமிழெழுத்துச் சீர்திருத்தம், தொல்காப்பியர் காலத் தமிழர், பூவா முல்லை, திருக்குறளும்பரிமேலழகரும் ஆகிய நூல்கள் திகழ்கின்றன.

—இவரது இலக்கணப் புலமைக்கு எடுத்துக்காட்டாக இன்னூல், யாப்பதிகாரம், தொடையதிகாரம் ஆகிய நூல்கள் விளங்குகின்றன. கும்பி, ஒப்பாரி, உடுக்கைப் பாட்டு, முதலான எல்லா வகையான சிந்துகளுக்கும் இலக்கணம் எழுதி, இளங்கவிஞர்களுக்கு ஒரு சிறந்த வழிகாட்டியாக விளங்கியவர், புலவர் குழந்தை ஆவார்.

ஓர் உரை வேந்தராக, இலக்கண மேதையாக, ஆராய்ச்சி அறிஞராக, வரலாற்று ஆய்வாளராக, நாடு போற்றும் நல்லாசிரியராக, தந்தை பெரியாரின் தொண்டராக, பகுத்தறிவு இயக்கத்தின் தன்மானக் கவிஞராக விளங்கி, தமிழுக்கும் தமிழ்நாட்டுக்கும் பெருமை சேர்த்த புலவர் குழந்தை அவர்களை, என்றும் நம் நெஞ்சில் நினைந்து போற்றுவோமாக!

# 13

## சிந்தனைச் சிலிர்ப்புகள் *

### [1]

ஒன்றிய சிந்தனையுடன் எந்தச் செயலில் நாம் ஈடுபட்டாலும் அதில் வெற்றி காண்பது திண்ணம். வேறுபட்ட சிந்தனைப் போக்குகளால் விளைவது மாறுபட்ட மனமாச்சரியங்களே.

நூல் இழைகள் ஒன்றோடு ஒன்று ஒன்றுவதால்தான் உடைகள் உருவாகின்றன. அஃதன்றி, இழைகள் எல்லாமே தனித்தனியாக இருப்போம் எனில், ஆடைகள் ஏது?

சிந்தனைகள் சிதறிப்போனால் சிதறு தேங்காயாக வீழ்ந்து சிதைய வேண்டியதுதான்.

சில்லறைகள் சேர்ந்தால்தான் மொத்தத் தொகையாகும். சிந்தனைகள் செழித்து ஒன்றினால்தான், செயல்கள் நடைமுறைக்கு வரச் சித்தமாகும்.

நம் இந்தியத் திருநாட்டில் தோன்றிய சிந்தனையாளர்தாம் எத்தனை பேர்? அறமே வடிவான திருவள்ளுவப் பெருந்தகை; அன்பே உருவான புத்தர் பெருமான்; அடக்கத்தின் மறுவடிவாம் விவேகானந்தர்;

---

* *10-4-88; 11-4-88; 12-4-88* ஆகிய நாட்களில் மாலை *6-25* மணிக்குச் சென்னை வானொலியில் 'ஒன்று நமது சிந்தனை' வரிசையில் ஒலிபரப்பானவை.

அகிம்சையே வேதமெனும் அண்ணல் காந்தி; அறிவே எல்லாம் எனும் தந்தை பெரியார்; அன்பால் அரவணைத்த அறிஞர் அண்ணா! நினைக்க நினைக்க பட்டியல்தான் நீளுமன்றி முடிந்திடாது. அவர்களின் சிந்தனையோடு. நாட்டு மக்களின் சிந்தனையும் ஒன்று படும்போதுதான், சிந்தனைகள் செயல்வடிவம் பெற இயலும்.

அறியாமை இருளில் சிக்கித் தவிக்கும் மக்களை, வெளிச்சத்திற்குக் கொண்டுவர ஒன்றிய அச் சிந்தனையே பெரிதும் உதவும். அறியாமை எனும் அந்தகாரம் முழுது மாக அகன்றிட நம்மாலான முயற்சிகள் அனைத்தையும் முடிந்தவரை மேற்கொண்டே ஆகவேண்டும்.

பெரிய பெரிய மேதைகள் எல்லாம் தோன்றிய, இப் பழம்பெரும் நாட்டில் எழுதப் படிக்கத் தெரியாதவர் களின் எண்ணிக்கைதான் எத்தனை என்பதனை ஒரு கணமாவது நாம் அனைவரும் ஒருசேரச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். அந்நிலையை மாற்றிடும் முயற்சியில் ஒன்றுபட்ட சிந்தனையோடு முனைந்து செயலாற்ற வேண்டும்.

'அறிவுடையோன் ஆறு அரசுஞ் செல்லும்' எனில் அறியாமைக்கு அடிமையாகிக் கிடப்பதால் என்ன பயன்?' என்பதை எடுத்து உணர்த்தவேண்டும்.

கிராமங்களின் முன்னேற்றத்தில்தான் இந்தியப் பெருநாட்டின் ஏற்றமே அடங்கியிருக்கிறது. கிராமங் களில் உள்ள படித்தறியாப் பாமரமக்களின் மூன்றாவது கண்ணை நாம் திறக்கும்படிச் செய்யவேண்டும். அம் மூன்றாவது கண்ணே, கல்விக் கண்ணாகும்.

கேடே இல்லாத விழுமிய செல்வமே கல்வி என்றார் வள்ளுவர். 'வேறு அழகெல்லாம் அழகே அல்ல, கல்வி

யழகே அழகு' என்றார் நாலடி நல்லாசான். சிற்றுயிர்க்கு உற்ற துணை கல்வியைவிட வேறு எதுவும் இல்லை என அறுதியிட்டுக் கூறினர், நம் முன்னோர். அதனால், பிச்சை எடுத்தேனும் கல்வி கற்பது நல்லது என அறிவுரையும் பகர்ந்து சென்றனர்.

கல்லாதாரைக் களர்நிலமாகவே கருதினர். களர் நிலம், கட்டாந் தரிசாக இருப்பதன்றி வேறு எதற்குப் பயன்படும்? களர்நிலமாக—கட்டாந்தரிசாக மக்களில் சிலர் இருப்பதால் இம் மாநிலத்திற்கு யாது 'பயன்? இச் சிந்தனை மலர் அனைவரின் நெஞ்சத் தோட்டங்களிலும் ஒருசேரப் பூத்துக் குலுங்கவேண்டும். அப்போதுதான், களர் நிலங்களெல்லாம், விளைச்சல் தரும் பயிர்நிலங் களாக மாற்றம் பெறும்; கைநாட்டு நிலைமை மாறும்; கல்விநாடும் நிலைமை மலரும்; நம்நாட்டு நிலைமை மேலும் உயரும்.

"கல்லாரைக் காணுங்கால் கல்வி நல்காச்
கசடர்க்குத் தூக்குமரம் அங்கு உண்டாம்"

என்னும் பாவேந்தரின் பாடல் நம் அனைவர் நெஞ்சத் திலும் ஒருசேர ஒலித்துக்கொண்டே இருக்கவேண்டும்.

"பயிற்றிப் பல கல்வி தந்து இப்
பாரை உயர்த்திட வேண்டும்"

என்னும் பாரதியின் கருத்து, நம் மனத்தில் பசுமரத் தாணிபோல் பதிந்து சிறக்கவேண்டும்.

நம் ஒவ்வொருவர் உள்ளத்திலும் தோன்றும் ஒருமிந்த சிந்தனையால், அறியாமை இருள் அகலட்டும்; அறிவு ஒளி எங்கணும் பரவட்டும்; அதற்கு, ஒன்றிய நம் சிந்தனை உறுதுணையாக அமையட்டும்.

[2]

'நம் நாடு உயர வேண்டும்; நாட்டு மக்கள் நிலை உயரவேண்டும்' என்ற சிந்தனை நாட்டிலுள்ள அனை வருக்கும் ஒருசேர அமையவேண்டும். அத்தகைய ஒன்றிய சிந்தனையால்தான், நாட்டின் நலிவினைப் போக்கிட இயலும்.

இன்று நாட்டு மக்களில் எத்தனைபேர் இல்லாமைப் பேயின் இறுக்கமான பிடியில் சிக்கித்தவித்துக்கொண் டிருக்கிறார்கள். இதை எல்லோரும் ஒருசேர எண்ணிப் பார்க்கவேண்டும்.

மக்களை வாட்டி வதைத்துக் கொண்டிருக்கும் வறுமைத்தீயை அணைத்திட அனைவரின் சிந்தனையும் ஒன்றுபட வேண்டும்.

'தனியொருவனுக்கு உணவில்லையெனில் இச் சகத்தினை அழித்திடுவோம்' என்று பாடினார் பாரதி. இச் செகத்தினை அழிக்கவேண்டும் என்பதுவா பாரதியின் எண்ணம்? இல்லை. 'வயிற்றுக்குச் சோறிட வேண்டும்; இங்கு, வாழும் மனிதருக்கெல்லாம்' என்ற உயர்ந்த நோக்கன்றோ, அவரை அப்படிப் பாட வைத்தது. அந்நோக்கு, பாரதியாருக்கு மட்டும் இருந்து விட்டால் போதுமா? பண்பாட்டுப் பெருமைமிக்க இப் பரந்த நாட்டின் ஒவ்வொரு குடிமகனின் நெஞ்சத்தி லும் குடிகொள்ள வேண்டாமா? அச் சிந்தனையால் அனைவரும் ஒன்றுபடும்போதுதானே, வாட்டி வதைக்கும் வறுமைச் சாத்தானையே நாம் வாட்டி வதைத்து விரட்டி அடிக்க முடியும்?

வறுமை என்பது எத்துணை பயங்கரமானது தெரியுமா? வள்ளுவரைக் கேட்டால் அது நெருப்பைவிட

கொடிது என்பார். 'நெருப்போடு விளையாடாதே' என்பார்கள். நெருப்போடு விளையாடுவது இருக்கட்டும். அந் நெருப்புக்கு நடுவிலேகூட, நிம்மதியாக ஒரு தூக்கம் போடலாமாம். ஆனால், வறுமைக்கு நடுவில் ஒருவன் தூங்குவது என்பது இயலாத ஒன்றாம். அப்படியாயின் நெருப்பைவிட வறுமை கொடியதுதானே, அப்படித்தான் வள்ளுவரும் கணித்துக் கூறுகிறார். அத்தகைய வறுமையானது நம்நாட்டு மக்களில் எந்தப் பிரிவினரையும் அண்டவிடலாமா? அதை அகற்றியே தீருவது என்ற சிந்தனை வேகம் அனைவருக்கும் ஒருசேர ஏற்படவேண்டாமா? ஒன்றிய உள்ளங்களின் உரத்த சிந்தனைக்கு முன்னே, எதிர்நிற்க முடியாமல், ஓலமிட்டு ஓடாதோ, வறுமைப் பேய்?

இல்லானை இல்லாளும் வேண்டாள்; ஈன்றெடுத்த தாயும் வேண்டாள் என்பாரின் கூற்றை எண்ணிப் பார்க்கவேண்டாமா? இல்லாளையும் ஈன்ற தாயையுமே வேண்டாத அளவுக்குச் செய்யும் வறுமையை நாட்டில் உலவ விடலாமா? அதனை விரட்டி அடித்திட நம் அனைவரின் சிந்தனையும் ஒன்றுபட வேண்டாமா?

வறுமைக்கோட்டுக்குக் கீழே வீழ்ந்து வாடிக்கொண்டிருக்கும் மக்களின் வாட்டம் போக்கிட ஒன்றிய சிந்தனையோடு நாம் உழைத்திட வேண்டுமன்றோ!

'எல்லாரும் எல்லாப் பொருளும் எய்தலாலே, இல்லார்களும் இல்லை; உடையார்களும் இல்லை' எனப் பாடினானே கம்பன். அக் கவிஞனின் கனவுலகம், நனவுலகில் நம் கண்ணுக்கு எதிரில் காட்சியளிக்க வேண்டுமெனில், நாட்டின் முன்னேற்றம் கருதி, நாம் கடுமையாக உழைத்தே ஆகவேண்டும். 'இதுவோ பழம் பெரும் நாடு, ஓ, வறுமைப்பேயே! நெருங்காதே ஓடு'

என்னும் சிந்தனையால் நாம் அனைவரும் ஒன்றுபட வேண்டும்.

'எல்லோருக்கும் எல்லாம்என் றிருப்பதான
இடம் நோக்கி நடக்கின்றது இந்தவையம்!

என்னும் இலட்சியத்தை நமது இதயத்தில் ஏந்தி, ஏறு நடை போடுவோமாக!

'இலையே உணவிலையேகதி இலையே எனும் எளிமை
இனிமே லிலை எனவே'

முரசறைந்து வறுமையைப் போக்கி, வளமையை நோக்கி நம் தாய்த்திருநாடு ஏறு நடைபோட நாம் அனைவரும் ஒன்றுபட்டு உழைப்போமாக.

[3]

நிலமடந்தை என்றும், 'மண்மாதா' என்றும் பூமியைப் பெண்ணாகக் கருதிப் போற்றும் நாடு நம்நாடு. 'நடந்தாய் வாழி காவேரி' என்றும், 'வையை என்ற பொய்யாக்குலக்கொடி' என்றும் நதியையும் பெண்ணாகவே பாவிப்பது நமது பழக்கம்.

தாய்மொழி, தாய்நாடு என்று மொழியையும், நாட்டையும் தாயாக மதித்து வணங்கி வருவது நமது வழக்கம். 'எத்திசையும் புகழ்மணக்க இருந்த பெருந் தமிழணங்கே! எனத் தமிழைத் தாயாக எண்ணித் தரிசிப்பவர் சுந்தரம் பிள்ளை.

'முப்பது கோடி முகமுடையாள்—உயிர்
மொய்ம்புறம் ஒன்றுடையாள்—இவள்
செப்புமொழி பதினெட்டுடையாள்—எனில்
சிந்தனை ஒன்றுடையாள்'

எனப் 'பாரத மாதாவைப்' பாடிப் பரவியவர் சுப்பிரமணிய பாரதியார்.

நமது பழம்பெரும் இத் திரு நாட்டின் புதல்வியரைப் பற்றியும், அவர் தம் நிலையைப்பற்றியும் சிறிது சிந்தித்துப் பார்ப்போமா? மங்கையராகப் பிறப்பது என்றால் சாதாரணமாக முடியுமா? அதற்கு மாதவம் அல்லவா செய்தாகவேண்டும். பாரில் அறங்கள் நடப்பதற்குக்கூட மங்கையரின் பங்கயக் கை நலத்தைத்தானே காரணமாகக் காட்டுகிறார் கவிமணி.

இங்ஙனம், பெண்மைக்குப் பெருமை சேர்க்கும் இம் மண்ணில் பெண்ணடிமை பற்றிப் பேசலாமா? 'பெண்ணடிமை தீரு மட்டும் பேசும் திருநாட்டு மண்ணடிமை தீர்ந்து வருதல் முயற்கொம்பே' என்பது பாவேந்தரின் வாக்கன்றோ?

இருப்பினும், நமது சமுதாயம் பெண்களை இழிவாகவும் கருதி வந்திருக்கிறது. நம் நாட்டில் வழங்கிவரும் பழமொழிகளே அதற்குச் சான்றாகத் திகழ்கின்றன. 'பெண்புத்தி பின்புத்தி' 'ஆவதும் பெண்ணாலே அழிவதும் பெண்ணாலே' 'இந்திரன் கெட்டதும் பெண்ணாலே; அந்தச் சந்திரன் கெட்டதும் பெண்ணாலே' இவையெல்லாம், பெண்ணின் பெருமையையா பறை சாற்றுகின்றன, இல்லை. பெண்களின் அவலநிலைக்கு அல்லவா, அளவு கோல்களாக விளங்குகின்றன.

இந் நிலையை மாற்றியமைத்திட, ஒருமித்த சிந்தனைவீறு பெறவேண்டாமா? 'சேலை கட்டிய மாதரை நம்பாதே' என்றால், நம்மைப் பெற்றெடுத்த

தாயும் ஒருசேலை கட்டிய மாதுதான் என்பதை எப்படி மறந்துபோயினர்?

'அஞ்சாறு பெண் பிறந்தால் அரசனும் ஆண்டியே, என்று கூறக் காரணம் என்ன? வரதட்சணைக் கொடுமையின் எதிரொலியாக ஒரு பழமொழியே உலாவருகிறது என்பதைத்தவிர வேறென்ன நாம் எண்ண முடியும்? திருமணச் சந்தையிலே ஆடுமாடுகளைப் போலப் பெண்களை விலை பேசும் இழிநிலை ஒழிய, நமது சிந்தனை யோட்டம் ஒன்றுபட வேண்டாமா?

. 'அடுப்பூதும் பெண்களுக்குப் படிப்பெதற்கு' என்று கேட்ட காலமும் இருந்தது. அது பெண்ணினத்திற்கே ஒரு கெட்ட காலம்.

'எட்டும் அறிவினில் ஆணுக்கிங்கே பெண்
இளைப்பில்லை காண்'

என்று பாடும் இக்காலம், பெண்களுக்கு நற்காலம். அப்பொற்காலத்தில் பெண்மையைப் போற்றித் துதிப்பதோடு மட்டும் நின்று விடக்கூடாது. பெண்ணுரிமையை மதித்து நடக்கக் கற்றுக் கொள்ள வேண்டும்.

அன்னை நிவேதிதாதேவி, பாரதியாருக்குப் புகட்டிய பெண்விடுதலைச் சிந்தனை, பெரியார், பாரதிதாசனுக்கு ஊட்டிய பெண்ணுரிமைச் சிந்தனை நாடுதழுவிய சிந்தனையாக மலர்ந்து, நம் அனைவரது மனங்களிலும் மணம் பரப்புமாக!

பெண்களை இழிவாகக் கருதும் அவலநிலையை அகற்றி, பெண்ணின் பெருமையை மதித்து, 'ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழும்' சமத்துவ வாழ்வுக்கு வழிவகுத்து, இவ் வையகம் போற்ற வாழ்வாங்கு வாழ்வோமாக!! ஒன்று நமது சிந்தனை என்னும் உணர்வோடு உழைப்போமாக!!!

# 14

## இலக்கியப் புன்னகை

தமிழர்தம் வாழ்வையும் வீறார்ந்த நிலையையும் இவ் வையத்திற்குப் படம் பிடித்துக் காட்டுபவை, வண்டமிழ் இலக்கியங்களேயாம். இன்பமும் துன்பமும் கலந்த வாழ்க்கையின் இரு பக்கங்களையுமே, அவை நம்கண்முன் கொண்டு வந்து காட்டும்.

தொல்காப்பியம் நுவலும் எண்வகை மெய்ப்பாடு களுள்ளும் முதலில் இடம் பெறுபவை, 'நகையும் அழுகையும் தாம். அவற்றுள்ளும் முதலிடம் பெற்றுச் சிறப்பது, எள்ளல், இளமை, பேதைமை, மடமை என்னும் நான்கின் வழித்தோன்றும் 'நகை'தான். (சொல், மெய்ப், 248)

நகையுள்ளும் மென்மைப்பொருளுடன் கையாளப் படும் நுட்பமுடையது 'சிறு நகை' யாம், வள்ளுவர் அந் நுட்பத்தை,

''யான் நோக்குங்கால் நிலன்நோக்கும் நோக்காக்கால்
தான்நோக்கி மெல்ல நகும்''

[குறள், 1094]

என்னும் குறள்மூலம் புலப்படுத்திக் காட்டுவார். 'மெல்ல நகும்' என்பதற்கு, தனக்குள் மகிழ்தல் என்றும், முறுவலித்தல் என்றும் இருவகையாகப் பொருள்

கொள்வர். முறுவல், புன்முறுவல், புன்சிரிப்பு, புன்னகை என்றெல்லாம் இம் மென்னகை குறிக்கப்படுகிறது.

அகத்தில் தோன்றும் மகிழ்ச்சி, முகத்தில் தோன்றும் முறுவலாக மலர்ச்சிபெறும் நுண்மையை, நுண்மாண் நுழைபுலம் மிக்க புலவர் பெருமக்கள், எங்ஙனம் நம் மனக்கண்முன் கொண்டுவந்து நிறுத்துகிறார்கள் என்பதைச் சில எடுத்துக்காட்டுகள் மூலம் புலப்படுத்த முயலும் ஒரு சிறு முயற்சியே இங்கு மேற்கொள்ளப் படுகிறது.

## முல்லையின் முறுவல்

குறுந்தொகைத் தலைவி ஒருத்தி, தலைவனைப் பிரிந்து, தனிமையில் தவித்துக்கொண்டிருக்கிறாள்; தணல்வீழ் புழுவாய்த் துடித்துக்கொண்டிருக்கிறாள். அவன் வருவதாகச் சொல்லிச்சென்ற கார்காலமும் வந்துவிட்டது. அவனோ, வந்த பாடில்லை.

ஒரு மனஆறுதலுக்காகத் தோட்டத்துப் பக்கம் செல்லுகிறாள். அங்குப் பாங்குடன் வளர்ந்து பசுமையாகப் படர்ந்துள்ள முல்லைக்கொடி ஒன்றைக் காணுகிறாள். அதிலோ, சின்னஞ்சிறிய முல்லை அரும்புகள் செழித்துக் குலுங்குகின்றன. அவ் வெண்ணிற அரும்புகளைக் கண்ட அவ் வேல்விழியாளின் எண்ணமோ வேறுவிதமாகச் செல்லுகிறது; அதனால் விளைந்த வேதனையோ அவளைக் கொல்லாமல் கொல்லுகிறது!

அம் முல்லை அரும்புகளைக் கண்ட அவள், என்ன தான் எண்ணுகிறாளாம்? அம் முல்லைக்கொடி வெண்ணிறமான அரும்புகளால் தன்னை ஏளனமாகப் பார்த்துப் புன்னகை புரிவதாக அவளுக்குத் தோன்றுகிறது. ஆம்! தலைவனைப் பிரிந்து தவித்துக்கொண்

டிருக்கும் தன்னைப் பார்த்து எள்ளி நகையாடும நோக்கோடுதான், வெண்ணிற அரும்பு காட்டி முறுவல் செய்கிறதாம் அம் முல்லைக்கொடி. 'இது நியாயமா?' என அதனிடமே கேட்டும் விடுகிறாள், எங்ஙனம்? இதோ, அக் குறுந்தொகைப் பாடல்:

"..................முல்லை, நீ நின்
சிறுவெண் முகையின் முறுவல் கொண்டனை
நகுவை போலக் காட்டல்
தகுமோ, மற்றிது தமியோர் மாட்டே?"

[குறுந்தொகை, 162]

'தனிமையில் தவிக்கும் தன்னிடம் இங்ஙனம் நடந்து கொள்வது தகுமோ?' என்று, வேதனையின் விளிம்பில் நின்று, அத் தலைவி விடுக்கும் வினா, படிப்போர் நெஞ்சமதைப் பாகாய் உருகச்செய்யும் பான்மையில் அமைந்திருக்கின்றதன்றோ?

## நுண்ணிதின் மகிழ்தல்

இல்லறம் என்னும் நல்லறத்தில் அடியெடுத்து வைத்துள்ள புதுமணத் 'தம்பதியர்' இருவரின் குதூகல மான வாழ்க்கை நிகழ்ச்சி ஒன்று குறுந்தொகையில் அழகாகப் படம் பிடித்துக் காட்டப்படுகிறது. அக் காட்சியை நாமும் காண்போமா?

தன் அன்புக் கணவனுக்குத் தானே சமைத்திட எண்ணுகிறாள் அக் குறுந்தொகைத் தலைவி. மோர்க் குழம்பு ஆக்கும் நோக்குடன் கெட்டித் தயிரை எடுக்கிறாள். அது நன்றாக முற்றிய கெட்டித்தயிர். அதனைத் தனது காந்தள் போன்ற மெல்லிய கைவிரல் களால் நன்கு பிசைகின்றாள். அந்நேரம், அவள் உடுத் திருக்கும் ஆடை நெகிழ்கிறது. தயிரைப் பிசைந்த

அக் கையாலேயே, நெகிழும் ஆடையை நெகிழா வண்ணம் இறுக உடுத்துக்கொள்கிறாள். அம் மோர்க் குழம்பு மணங்கமழ்ந்திட, தாளிக்கத் தொடங்குகிறாள். தாளிக்கும்போது எழும் புகை, தனது கண்ணிற் படுமே என்பதுபற்றி அவள் கவலைப்படவில்லை. புகையின் ஊடே, கண்ணால் கூர்ந்து நோக்கிப் பக்குவம் கெடாவண்ணம் துழாவுகிறாள். ஒரு வழியாக, சமைய லும் முடிகிறது.

அன்புக் கணவனை அமுதுண்ண அழைக்கின்றாள். தானே சமைத்து முடித்ததை, அவனுக்குப் படைத்து மகிழ்கிறாள். அதனை உண்ட அவனோ, 'இனிமை, மிக இனிமை' எனப் பாராட்டிக்களிக்கின்றான். 'இனிதா யிருக்கிறது' என்ற கணவனின் மொழிகேட்டு, அக் காரிகையின் முகத்திலோ மலர்ச்சியின் ரேகை படர்கிறது. இதழ்களிலோ நுட்பமான புன்முறுவல் இழையோடு கிறது. அக் கோலக் காட்சியை நம்முன் காட்டும் குறுந் தொகைப் பாடல் இதோ:

"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇக்
குவளை உண்கண் குய்ப்புகை கமழத்
தான்துழந்து அட்ட தீம்புளிப் பாகர்
இனிதுஎனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே!"

[குறுந்தொகை, 167]

### வாய்அல் முறுவல்

கோவலன் கொலை செய்யப்படுவதற்கு முன்பாக, ஓர் இயல்பான இல்லறக் காட்சியைப் படைத்துக் காட்டுகிறார் இளங்கோ. 'குமரி வாழையின் குருத்தகம்

விரித்து' கோவலனுக்கு அமுது படைக்கிறாள், கண்ணகி. அமுதுண்டு முடித்த அவனுக்கு, மெல்லிய வெற்றிலையும் பாக்கும் கொடுத்துப் பணிந்து நிற்கிறாள் அவள்.

அன்னாளை அருகழைத்து, அன்போடு அரவணைத்து, தனது செயலுக்காக வருந்திப் பேசுகிறான் கோவலன். மனந்திருந்தி, மனந்திறந்து பேசும் அவனிடம் தனது மனச்சுமையைச் சிறிது இறக்கிட எண்ணி, கண்ணகியும் மனம் விட்டுப் பேசுகிறாள்.

'புகாரில் நான் தனித்திருக்கும் நாளில், நுமது அன்பான தாயும் தந்தையும் என்னைக் காண வந்தனர். தங்கள் உள்ளத்தில் இருந்த வருத்தத்தை எல்லாம் மறைத்துக்கொண்டு, என்னைப் பலபடப் பாராட்டிப் பேசினர். அப்போது, நான் காட்டிய புன்முறுவலே, என் உண்மை நிலையை வெளிப்படுத்திவிட்டது. காரணம், அஃது உண்மை அல்லாத புன்முறுவல்; வரவழைக்கப்பட்ட புன்முறுவல் என்பதைப் புரிந்து கொண்டார்கள். அப்போது, அவர்கள் உள்ளம் மிகவும் வருந்தியதைக் கண்டேன். அப்படி வருந்தும்படி போற்றா ஒழுக்கம் புரிந்தீரே!' என்கிறாள் கண்ணகி:

"..................யான் அகத்து ஒளித்த
நோயும் துன்பமும் நொடிவது போலும் என்
வாய்அல் முறுவற்கு அவர் உளம் வருந்த"

(சிலம்பு, கொலைக்களக்காதை, 78—80]

என்னும் கண்ணகியின் மனந்திறந்த பேச்சில் வெளிப்படுவதே 'வாய்அல் முறுவல்' என்னும் இளங்கோவின் அற்புதச் சொற்கோவையாகும்.

நலங்கேழ் முறுவல் :

இதே கண்ணகியின் 'உண்மையான முறுவலை'யும் இளங்கோ நமக்குக் காட்டும் ஓர் இடமும் சிலம்பில் இடம் பெற்றுள்ளது.

'சோமகுண்டம் சூரியகுண்டம் என்னும் துறைகளில் மூழ்கி எழுந்து, காமனைத் தொழும் பெண்டிர், தம் கணவனோடு பிரியாத வாழ்க்கையைப் பெறுவர்' எனக் கூறி அழைக்கும் தேவந்தியிடம், 'அது, பீடு அன்று' என மறுத்துக் கூறுகிறாள் கண்ணகி. அந் நேரம், அங்குக் கோவலன் வருகின்றான். 'எல்லாப் பொருளையும் தொலைத்து விட்டு வந்து நிற்கிறேன். அது எனக்கு மிகுந்த வெட்கத்தைத் தருகின்றது' என வேதனையோடு கூறி நிற்கின்றான்.

அவ் வேதனை உரையைக் கேட்ட கண்ணகியின் உள்ளம் நெகிழ்கிறது; பொருளை இழந்ததால்தானே இப்படி வந்து புலம்பி நிற்கின்றான் என்று எண்ணுகிறது. அந்த எண்ணத்தால், தனது காற்சிலம்பினை மனமகிழ்ச்சியோடு அவனிடம் தருவதற்குத் தயாராகிறாள் கண்ணகி. அப்போது அவள் உதட்டில் 'உண்மையான முறுவல்' காணப்படுகிறது. அக் காட்சியை,

''நலங்கேழ் முறுவல் நகைமுகம் காட்டி
சிலம்புஉள கொண்டும்...''

[சிலம்பு, கனாத்திறம். 72—73]

எனப் படம் பிடித்துக் காட்டுகிறார் இளங்கோ. கண்ணகியின் ஒளி திகழும் முகத்தில், நன்மையோடு கூடிய முறுவல் தோன்றியதாகக் குறிப்பிடுகின்றார். நன்மை செய்யும் நாட்டமுடன்தானே சிலம்பினைத் தர விழைகின்றாள். அதனாற்றான் அதனை, 'நலம்கேழ் முறுவல்' என்கிறார் இளங்கோ.

## சிறியதோர் முறுவல்

இருவகையான முறுவல்களைக்கவினுறச் சித்தரித்துக் காட்டுகிறார், கவிச்சக்கரவர்த்தி கம்பர். அக் காட்சியைக் காணவேண்டுமாயின், 'சான்றோர் கவியெனக் கிடந்த கோதாவரி' நதிக் கரைக்குத்தான் நாம் சென்றாக வேண்டும்.

அதோ...கோதாவரி தீரத்தின் கோல அழகினைக் கண்டு, குதூகலமுடன் சென்றுகொண்டிருக்கின்றனர் இராமனும் சீதையும்! அவ் வழியாக, அன்னம் ஒன்று அதற்கேயுரிய அழகு நடையுடன் வரக் காண்கிறார்கள்! அவர்களைக் கண்டதும், பறவைகளுக்கே உரிய இயல்புடன் அது ஒதுங்கிப்போகிறது. அதைக் கண்ட இராமனின் காதல் நெஞ்சமோ, அற்புதமான ஒரு கற்பனை செய்து பார்க்கிறது.

'அழகான நடைக்குரிய இந்த அன்னப் பறவை, நம்மைக் கண்டதும் நாணம் அடைந்ததுபோல் ஒதுங்கி நடப்பானேன்?' என்று எண்ணிக் கொண்டே, தனது அருகே நடந்துவரும் சீதையின் அழகு நடையை உற்று நோக்குகிறானாம் இராமன். அப்போதுதான் அவனுக்குக் காரணம் புரிகிறதாம். அவனது இதழோரத்தில் ஒரு புன்னகை அரும்புகிறதாம். அக் காட்சியை,

"ஓதிமம் ஒதுங்கக் கண்ட
உத்தமன் உழைய ளாகும்
சீதைதன் நடையை நோக்கிச்
சிறியதோர் முறுவல் செய்தான்!"

எனப் படம் பிடித்துக் காட்டுகிறார் கம்பர். சிறியதோர் முறுவலின் பெரியதோர் பொருளை நாம் உய்த்துணர விட்டுவிடுகிறார் அவர். சீதையின் நடைக்குத் தோற்றுத்

தான், அன்னம் ஒதுங்கிப்போனதாகக் கருதியே, இராமன் சிறியதோர் முறுவல் செய்ததாகச் செப்புகிறார் கம்பர் எனலாம்.

## புதியதோர் முறுவல்

இங்ஙனம், இராமன் புன்முறுவல் கொண்டதுபோல், சீதையும் புன்முறுவல் கொள்ளும் ஓர் இயல்பான சூழல் உருவாகிறது. இராமனது புன்னகைக்கு அன்னம் காரணமாக அமைந்தது எனில், சீதையின் புன்னகைக்கு ஆற்றில் தண்ணீர் அருந்திவிட்டுச் செல்லும் யானை காரணமாக அமைந்து விடுகிறது.

ஆற்றுக்கு நீர் அருந்த வந்த யானையொன்று, நீர் அருந்தி முடிந்ததும் இயல்பாகத் திரும்பிச் செல்கிறது. சீதையின் காதல் நெஞ்சமோ, வேறுவிதமாக அதனைக் கற்பனை செய்து பார்க்கிறது. எப்படி? இராமனது எடுப்பான நடைக்குத் தோற்றுத்தான், யானை புறமுதுகு காட்டித் திரும்பிப்போகிறதாம். அங்ஙனம் எண்ணியவுடன் அவளது இதழோரம் புதியதோர் புன்னகை அரும்புகிறதாம்.

> ''மாதவள் தானும் ஆண்டு வந்துநீர் உண்டு மீளும்
> போதகம் நடப்ப நோக்கிப் புதியதோர் முறுவல் பூத்தாள்''

என அக்காட்சி அழகுறக் காட்டப்படுகிறது.

இங்ஙனம்; தமிழ் இலக்கியங்களில் பல்வேறு முறுவல்கள் பாங்குறக் காட்டப்பட்டுள்ளன. அவை, கவிஞர்தம் கற்பனைத் திறனையும் கவியாற்றலையும் வெளிப்படுத்துவனவாகவும் அமைந்து சிறக்கின்றன.

★



டாக்டர் மு. பி. பா.

முத்தமிழ் பிறந்தது பாவிலே என்பதை
மு. பி. பா. வென மொழிந்தனர் மாணவர்
இத்தமிழ் அறிஞர் இளைஞரா யிருக்கையில்
எண்ணிலாக் கலைகளை இயல்பா யறிந்தார்...
பொதிகைத் தமிழினில் பொதிந்தது இதயம்
புறப்பொருள் அகப்பொருள் இவையே உதயம்
'அய்யா' புரத்தார்; பகுத்தறிந் தாய்ந்து
மெய்யாய் இருப்பதை மேன்மையென் றிடுவார்
அருளா தாரம் பக்திஎன் றெண்ணாமல்
அறிஞர் அண் ணாவினைப் பற்றிக் கொண்டவர்
சிந்தையில் மு. வ., செயலினில் மு. க.
செந்தமிழ்க் கென்றே வந்து பிறந்தவர்
அரசுப் பரிசும் ஆய்வுப் பட்டமும்
ஆற்றலால் பெற்றவர்; போற்றுதற் குரியவர்
ஏணி கல்வியில்! ஏற்றம் கவிதையில்!
இலக்கிய அன்பர், என் நண்பர் வாழ்கவே!

—கவிஞர் தஞ்சைவாணன்

Wrapper Printed at Eskay Art Printers
Madras-600 005. Phone : 844727